# ஸ்ரீமாயூரம்

# இடப தீர்த்தம்

ஸ்ரீ கௌரிமாயூரம்

முனிஸிபல் ஹைஸ்கூல் தலைமைத் தமிழ்ப் பண்டிதர்

S. வேலாயுத முதலியார்

எழுதியது

புராணிகர், காஞ்சி

[illegible]

அவர்கள்

அன்பளிப்பு

சென்னை

வி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்

வெளியிட்டது

ரிஜிஸ்தர் செய்தது] 1911 [விலை அணா இரண்டு

# முன்னுரை

இது இத்தல தீர்த்த மகத்வம். இதனால் இம்மைப் பேறும், மறுமைப்பேறும் உண்டாகுமென்பது புராணப்ரசித்தம். செருக்கடைந்தாரது தீமையும், வழிப்பட்டாரது மேன்மையும், பூர்வ புண்ய அமைப்பும் ஆகிய தர்மங்களை விளக்குவிக்கும் புராதன நூல் தர்மகுண சீலர்களாய சில புண்ணியர்களது விருப்பப்படி வெளியேறுகின்றது.

இதனுள் அபூத உவமைகள் அலங்காரங்கள், அதிசயோக்திகள், வீண் கதைப் பெருக்குகள், முதலிய இவைகள் பெரும்பாலும் இல்லை. புராணத்திற் கேற்ப பெரியகடையில், இடையே இனிய பாடல்கள் விரவிவரும்படி எழுதியது, சிவநேய செல்வர்கள் கண்டு கேட்டு இன்பமெய்துதற் பொருட்டேயாம். இதன் நடை பண்டிதர்கட்கும், சாதாரணர்கட்கும் ஆராது. மேற்கண்ட மக்கள் வரைந்தார்கள் இத்தகைய வரிசை காண்பவர், இதனையுங் கண்ணுற்று மெய்யுணர் வெய்தி நலம் பெறுவாராக.

சி. வே.

சிகரங்களை யுடையது. முன்னம் பரமசிவன் ஆணையால் குறுமுனிவன் அடக்கிய விந்தியவரை என்பதுவும் அதுவே.

அதன் மேற்பாங்கர் இனிமையான பலவித தீங்கனிகளைத் தரும் மரங்கள் அடர்ந்து சிறந்து இருந்த அரண்யம் ஒன்று உண்டு. அங்குள்ள கானப்புட்கள் மகிழ்சிறந்து இசைக்கும் கீதங்கள் யாவர் மனத்தையும் உருகச்செய்யும். மரங்களின் கவைகளில் மயில்கள் தத்தம் அழகிய தோகைகளை விரித்து நின்று பார்ப்பவர் கண்ணுங் கருத்தும் களிப்புற ஆடும். கலைமான் கூட்டங்கள் அங்குமிங்கும் ஓடித் துள்ளித் துடித்து விளையாடாநிற்கும்.

அவ்விடத்து, 'கயிலாயகிரியே உருகிப் பூமியின் கண் வந்து நிலைத்துள்ளதுபோல்' மிக்க ரமணீயமாக விளங்கப் பெற்றிருந்தது ஓர் பெருந் தடாகம். அதன்கண் செவ்விய மலர்கள் அரும்பிப் பூத்து வெகு மனோகரமாகத் தம் மணத்தைத் தங் கேள்வனாகிய இளங்காற்றுடன் கலந்து ஆகாயமெங்கும் பரவச் செய்தன. ஆண்டு முழுமுதல் அறிவனது உள்ளம் ஆகிய ஓங்கிலில் உற்பத்தியாகி, அறியாமை என்னும் விருக்ஷங்களை முறித்துத் தள்ளி, மெய்ம்மை என்னும் கருத்துக்கள் ஆகிய பொன்னினைக் கொழித்து, கீழ்மக்கள் உள்ளம் ஆகிய பாறையில் மோதி, ஐயம் என்னும் சுழியில் அலைப்புண்டு, தோற்றம் என்னும் பெருமுழக்கோடும் எழும்பி, சொல்லாகிய திணை மருவி, இனிமை என்னும் நால்வகைப் பொருள்களை மன்பதைகள் இருதயமாகிய பரப்பினில் நிரப்பி, இலக்கிய இலக்கணம் என்னும் கால்கொண்டு நிலவி, உலாவுவதாகிய "செந்தமிழ்" என்னும் அருவியா-

னது நடுநிலை திறம்பாது ஓங்கி மிக்கப் பணிவுடைய நன் மாணவர் மனம் என்னும் ஓடையிற் போய் பாய்தற்குச் செய்யும் 'பெரு நாவலர்க்கு இடுக்கண் விளைவிக்கும் பேதையர் போலத்' தேனை யுண்டு தன்னை மறந்து கடல்போல் ஆரவாரிக்கும் வண்டு-களின் கூட்டங்கள் மொய்த்து நெருங்கி இருந்தன. அப்படிப்பட்ட செவ்விய வனத்திடை முற்றத் துறந்து முழுத்தவம் எய்திய சில முனிவர்கள் பர்ண-சாலைகள் அமைத்துக்கொண்டு தத்தம் மனைவிய-ரோடு வசித்திருந்தனர்.

அவர்களுள் வேதத்தைப் பன்முறை யோதி அப்பியாசம் செய்குநர் சிலர். செந்தீ வளர்த்து வேள்வி முறையாற்றி தேவர்கட்கு ஆகுதி கொடுக்கு-நர் சிலர். அதிதீவிர பக்தி மேலிட்டு ஞான கலைகளை ஆராய்ச்சி செய்குநர் சிலர். ஐம் பொறிகளை யடக்கி நிட்டை புரிகுநர் சிலர். ஆகிய இவருள் ஒருவரை, பேரானந்தமே பெரிய பொருளாகக் கொண்டு ஞானக் கண்ணினால் எவ்வகை உண்மைகளையும் உற்-றுணர்ந்தறியுங் காரணத்தால் பார்ப்பவர் எவரும் கண்ணுவர் எனப் பெயரிட்டு வழங்கலாயினர். அம் மாதவப் பெருமகன் தந்தரும பத்தினியோடு பெருமை வாய்ந்த காசியை யடைந்து கங்கையில் மூழ்கவேண்டும் என விரும்பித் தன் ஆர்சிரமத்தி னின்று வெளிப் போந்து பெரு நதிகளையும், நெடுங்-குன்றங்களையும், சிறு பெரு ஊர் வனங்களையும் கடந்து போய்க்கொண்டிருந்தனன்.

வழியில், அழுக்கடைந்த கறுத்த மேனியர்க-ளாய், காண்பவர் கண்ணும், கருத்தும், மிக்க அருவை யடையும்படி விகாரரூபிகளாய் மூன்று

பெண்கள் எதிர்வந்து கொண்டிருந்தனர். அவர்களைக் கண்ணுற்ற அருந்தவ முனிவர், சண்டாளப் பெண்கள் என்று உள்ளத்தில் நினைந்து வாய் திறந்து பேசாது கையை நீட்டி ஒருவிரலால் சைகையாக அடுத்த வயலில் இறங்கி எட்டிப் போகும்படி காட்டினர். அது அறிந்த மங்கையர் மூவரும் கைகொட்டிக் குலுங்க நகைத்து முனிவருக்குச் சமீபமாக வந்தார்கள்.

அதைக்கண்ட முனிவர், மிக்க கோபங்கொண்டு அப் பெண்மணிகளை ஏறிட்டுப் பார்த்து, 'மங்கைகாள்! உங்களுக்குச் சிறிதேனும் அறிவு என்பது இல்லைபோலும். உங்களை நோக்கினால் இழிந்த தன்மையராகிய பறைக்குலப் பெண்கள் போலக் காண்கின்றது. "பூரியோர்க்கில்லை சீரிய வொழுக்கம்" என்பது சான்று பகர்கின்றது. எள்ளளவேனும் மேல் கீழ் என்ற வரம்பினைச் சற்றும் யோசிக்காத கொடும் அகங்காரிகளாக விருக்கின்றீர்கள். இது தருமம் அல்ல. இனியாகிலும் அடுத்த வயலில் இழிந்து விலகி நடவுங்கள்," என்று கடுகடுத்து முகஞ்சுளித்து உரத்த குரலாகக் கூயினர்.

அதுபோது, அப் பெண்மணிகளில் மூத்தாளாகிய மந்தாகினி என்பாள் முனிவர் பெருமானை நோக்கி நின்று, "முற்றத் துறந்து முழுத்தவம் எய்திய முனிவீர்! உமக்கு அநேகம் வந்தனம். அடியேங்கண்மீது, இவ்வளவு அசூயை உண்டாவதற்கு யாது காரணம்? அன்பு, அறிவு, தயை, சாந்தம், உண்மை, பக்தி, இரக்கம் கடவுள் வழிபாடு முதலிய பலவித பெருங் குணங்கள் நிறைந்த தேவரீருக்கு இப்படிப்பட்ட கொடுங் கோபமும், பிறவுயிரிடத்து

மனவெறுப்பும், மிக்க அவசரமும், உண்டாவது தகுதி யன்று. ஆய்ந்தோய்ந்து நிதானிக்கின்ற கொள்கை நுங்குலத்திற்குத் தொன்று தொட்டு இல்லைபோலும். நாங்கள் புலைத்தன்மை வாய்ந்த பறைக்குலப் பெண்கள் என்று முன்பின் யோசியாது கூறினீர். அப்படிப்பட்டவரும் அல்ல. எங்கள் பிறப்பின் உண்மைகளை யறிந்த பின்னர் அன்றோ உரையாடுவது தகுதி; நாங்கள் இப் பூலோக மாதர்கள் அல்ல. நாங்கள் தெய்வப் பெண்கள் என் பெயர் மந்தாகினி என்னும் கங்கை. இதோ உள்ளவள் வாணி. மற்றவள் காளிந்தி. எங்களுக்கு நேர்ந்த பாவ அழுக்கைக் கழுவப புனிதம் எய்த புண்ணிய தலத்தை நாடிச் செல்கின்றோம்" என்று மொழிந்தனள்.

அதை யுணர்ந்த முனிவன் மிக்க ஆச்சரியங் கொண்டு நின்று, "சீரிய தெய்வத்தன்மை வாய்ந்த அணங்கன்மீர்! நீவிர் சகல பாவங்களையும் நினைத்த மாத்திரத்தில் போக்கவல்ல உங்கட்கு இவ்வடிவம் வந்த காரணம் யாது? எதுபற்றி? இயற்கை மணம் வீசப்பெற்ற திருமேனியுடைய ராயிற்றே! புலால் மணம் கமழும் பார்த்த புலையுடலைப பெற்று உலாவுகின்றீர்! யாது பிழை யிழைத்தீர்? எவரால் இக் கொடுமை நேரிட்டது? உங்கட்கும் பாவத்தைப் போக்கவல்ல ஓரிடம இருக்கின்றதோ! நீங்கள் சொல்வது என் மனத்திற் கொவ்வவில்லை. தெய்வ ரகசியம் யாரறிவதோ! அது வியப்பினும் வியப்பே" என்றனர்.

மந்தாகினி — மாசற்ற நெஞ்சுடையோய்! உலகின்கண் உள்ள எல்லா மனிதர்களும் அவரவர் செய்

யும் கொடும் பழி பாவம் முதலானவைகள் நீங்க, எங்களைத் தேடிவந்து மூழ்கித் தாரை வார்த்து ஒப்புவித்துப்போகின்றனரன்றோ! அவையாவுங் கூடி எங்கள் ரூபத்தின் பொலிவைக் குறைத்துக் கண்டவர் எவரும் இகழுமாறு செய்து விடுகின்றன. அதனால் 'கல்வி யறிவு இல்லாதவர் உள்ளம்போல்' இருண்ட வடிவை வாய்ந்திருக்கின்றோம். அல்லாமல், நாங்கள் எவர்க்கும் ஒரு தீங்கும் விளைவித்தது இல்லை. எங்கட்கும் ஒருவர் பிழையிழைத்தனரல்லர். அவற்றால் நேர்ந்த கொடுமையைத்தாங்கிப் பொறுக்க எங்கள் மனம் சம்மதப்படவில்லை. மிக்க வருத்தமே அதனால் உண்டாகின்றது. ஆயினும் அதை யொழிக்க எல்லாம் வல்ல இறைவன் ஒரிடம் வகுத்திருக்கின்றனன். அதனை நாடிச் செல்லுகின்றோம்.

கண்ணுவர்:—அப்படிப்பட்ட இடம் யாண்டு உள்ளது? இது காறும் கண்டுங் கேட்டும் இராத அற்புத வார்த்தை புகல்கின்றீர்! எல்லாக் கொடிய வினைகளையும் தீர்த்து அழிவில் இன்ப வீட்டைத் தரவல்ல சக்தி உங்கள் மாட்டு உள்ளதெனை, சகல வேதாகம புராண இதிகாசாதிகள் தொன்றுதொட்டு அறுதியிட்டு உறுதி கூறி யிருக்க ஏதோ "காக்கை ஏறப் பனம்பழம் விழுந்தது" என்ற நியாயங் காட்டுகின்றீர். இது உலகில் சாமான்யரும் ஒப்புக்கொள்ளக்கூடிய தல்லவே. எதன் பொருட்டு இப்படிக் கூறுகின்றீர்! இவ்வார்த்தையை நினைக்குந்தோறும் என் மனம் துணிவுபடவுமில்லை. உண்மையென ஒப்பினதுமன்று. இது வெகு விநோதம். உங்கள் வார்த்தையில் பொய்மையும் பரிகாசமும் உண்டாவது என்றும் இல்லை. உண்மை எதுவோ என்றனர்.

மந்தாகினி:— முக்குறும் பெறிந்த முனிவர நாயக! எல்லாம் வல்ல முழுமுதல் இறைவன் நீங்கலாக மற்றெல்லாப் பொருள்கட்கும் ஆட்சி, உச்சம், நீச்சம், பகை, நட்பு, ஒப்பு, உயர்வுபரிகாரம் என்பன உண்டு என்பது தேவரீர் அறியாததது அன்று. உலகில் யாவராலும் இனிது கொண்டாடப்படும் மூர்த்தி, தலம், தீர்த்தம் இவைகளால் ஒவ்வோர் மகத்துவம் மேம்பட்டிருக்கும். அல்லது மூன்றினாலும் ஏக தேசத்தால் பல மேன்மை வருவதுமுண்டு. ஆயினும், அவைகள் உலக இன்பத்தைத் தந்து அவரவர் முயற்சிக்கேற்ப, மறுமைச் செல்வமாகிய பதமுத்தி தந்திடுமேயன்றி, என்றும் அழிவில் பரமுத்தியைத் தராது. ஆகலினாற்றான், இத்தகைய தலங்களை **ஆகமஸ்தானம்** என்று கூறுவர் அறிவுடையோர். ஈண்டு யான் குறிப்பிடும் இடமோ! இருவினையொப்பு, மலபரிபாகம் வருவித்து சத்திநிபாதங் கூட்டி ஒப்புயர்வற்ற முழுமுதற் பொருளில் இரண்டறக் கலந் என்றும் மாறா நித்யானந்தத்தை யநுபவிக்கவல்ல பரமுத்தியைத் தரும். இதுவன்றோ மஹாவாக்கிய நிச்சய ஸ்தானம். இதுபற்றியன்றோ!

"மூர்த்திதலந் தீர்த்தம் முறையே தொடங்கினற்கு
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே"

என்று விளக்கியிருக்கின்றனர் முதியோர். அப்படிப்பட்ட ஓரிடம் இருத்தல் வேண்டுமென்றே அநாதியில் பரம்பொருளால் ஏற்பட்டிருக்கின்றது. என்று **எழுதாமறைக்கிளவி** இன்றும் ஒலமிடும். அவ்விடத்தேயே நால்வகைப் பயன்களையும் அடையக்கூடும் என்பது வேதப் பிரமாணம். அதுவே தவத்தினருள்ளம் போன்ற **வேதோக்தஸ்தானம்**.

பூர்வம் அங்கு இந்திரன், மால், அயன், உமை, வாணி, பல முனிவர்கள் ஆகிய பெருமக்கள் சமடம் என ஐம்பொறிகளை யடக்கி யருந்தவஞ் செய்து தத்தமக்கு வேண்டிய பேறுகளைப் பெற்றனர். இன்றும் அங்ஙன் பெருமிதம் வாய்ந்த வேதங்கள் கூறுமாறு மூர்த்தி மகத்துவம், தல மகத்துவம், சற்குரு மகத்துவம் நிரம்பி, இகபர சாதனங்களைப் பெறுவதைப் பிரத்யக்ஷமாகக் காணலாம். அதுவன்றி, ஒப்பற்ற முழுநீறு பூசி, கண்மணிகள் பூண்டு, சிவாம்ச பூதராய் நின்ற சிவாநுபூதிப் பெருஞ்செல்வர் ஐந்தெழுத்தை யிடைவிடாது மனமொழி மெய்களால் ஓதியிருக்குநர். வாட்டமில் அருளும், கோட்டமில் குணனும், அசையா நிலையும், நசையா மனனும், வெகுளாப் பண்பும், விடாப் பேரன்பும், செவ்வியின் மரீஇ, எவ்வெவர் எவ்வகை வேட்டனர், அவ்வகை விருப்பொடு குறிப்பின் வரையாதீயும் வள்ளற்றன்மை பொருந்துநர். துன்பம், இன்பம், எது வந்துறினும், பண்டைவினையின் பருவலியென்னப் பார்த்து மனநிலை கலங்காது உண்மை வழிகண்டு தந்தந் தொழின்முறை வழுவாது இயற்றி வருகுநர். புரந்தரன், மாஅல், அயன் இன்னோரன்ன பெருமக்கள் வாழ்வினை ஒரு பெருங்குறியாக் கொள்ளாது நிலை நிற்குநர். மானநோக்கிற் கவரிமா னனையநீரர், சந்திரன் வரவைக் கண்ட சகோரப் பக்ஷிபோல், பெரியோர் வரவை எதிர் நோக்கி நின்று, இருந்து கைம்மாறற்ற பேரன்பு காரணமா யேற்று உபசரிக்குநர். காரணமன்றிக் காரியத்திற் சிந்தை புகாது இருக்குநர். பண்டைப் பனுவலைப் பண்முறை பிறழாது படனம் புரிந்து அதனுட் பொதிந்து கிடக்கும்

அரும்பெருங் குவையலைவாரி யெடுத்தாய்ந்து சிந்தையினடக்கி யமைவுறச் செவ்விய நிலையில் இருத்தி வாழ்குநர். வைதீக நெறிவழி நின்று வேதாகம புராணங்களை யனவரதஞ் சாங்கோபாங்கமாய் ஆய்ந்துற்று உணர்ந்து அதன்வழி நடந்து காட்டுநர். எத்தகைய வடிவினை வாய்ந்த மகளிராயினும் விழையாது தாயெனக் கருதுந் தன்மையர். ஐம்பெரும் பொறிகளைப் புறவிடயங்களிற் செலுத்தாது அடக்கிச் செந்நெறியிற் செலுத்தும் ஆள்வினையுடையவர். எக்காலினும் எங்கணுங் குண்ட மண்டல வேதிகை யமைத்து மறைவழி நின்று இட்டிகை புரிந்து தேவர்கட்கு ஆகுதி யிடைவிடா தளிக்கு மாண்பினர். அகில லோகங்கட்குப் பரசிவமே பரம்பொருளெனத் தேர்ந்து தந்தஞ் சிந்தையை யவன்பா லிருத்தி,

"அழிபொரு ளுணர்வு மென்று மழிவதின் றாகி யின்பங்
கொழிபொரு ளுணர்வும் போதின் மணமென மனத்துட்
பழிபடு மிம்மை யாசைப் பந்தமா மறுமை யாசை
யொழிதர வெசச மாகி யுள்ளது பெறுதல் வேட்பார்"

என்றபடி யிருந்து 'அந்தமிலின்பத் தழிவில் வீட்டுணர்வு' பெறற்காய முயற்சியினிற்குநர். ஆகிய இத்தகைய விழுமிய பேரறிவு வாய்ந்த சாதுக்கள் அனேகர் அங்கு நிலையாகத் தங்கி இருந்து தீர்த்தத்துண் முழுகிப் புனிதம் எய்தி இன்புற்று இனிது இருக்கின்றனர்.

கண்ணுவர்: — நலந்தரு நதிகளின் நாயகமே! உமது வாக்கினின்று உண்டாகும் சொல்லமுதைக் காட்டிலும் வேறொன்று உண்டென்பது திரிகாலத்துமில்லை. அது நல்லவர் நட்பு எவ்வாறு இன்பம் பயக்குமோ அவ்வாறு மேலான இன்பம் பயந்து நாளுக்கு நாள் உள்ளூறி இனிக்கின்றது.

"செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினு மென்"

என்றபடி இருத்தலின் பயன் யாது? அதனால் உலகர்க்கு நேர்ந்த உபகாரமென்னை? ஆகலான் அடியேன் "எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு, மான்ற பெருமைத் தரும்" என்ற, பெரு நாவலர் மொழியைக் கடப்பாடாகக்கொண்டு உங்களுக்குச் சிறிது வருத்தங் கொடுத்தனன். அது என் மட்டிலும் நன்மை பயக்கக் கூடியதன்று. மக்கள் யாக்கையைக்கொண்ட எவர்க்கும் பயன்படுவது. ஆகலின், விவரமாக அப்புண்ணிய தலத்தின் பரபாவத்தை விளக்கல்வேண்டும்.

மந்தாகினி: — அருந்தவ நாயக! கேண்மின்!

"பூவினுட் பதுமம் போலும் புருடருட் டிருமால் போலுங்
காவினுட் கற்பம் போலுங் கலைகளுண் ஞானம் போலும்
ஆவினுட் சுரரான் போலு மறத்துளில் லறமே போலும்
நாவிலுண் மெய்ந்நாப்போலும நாட்டினுட் சோழ நாடு

என, ஆன்றோரால் புகழ்ந்து போற்றப்படுவதாகிய நாடு ஒன்று தென் நாட்டின்கண் உள்ளது. அதன் நடுநாயகமாக பல புண்ய தளிகளால் சூழப்பட்ட "மாயூரம்" என்னும் தெய்வத் திருத்தலம் ஒன்று இருக்கின்றது. அதனின் உத்தர பாகத்தில் அருள், வியாபகம், அன்பு, இனிமை, முதலிய அற்புதங்கள் நிறையப்பெற்ற நவகோடி தீர்த்தங்கட்குத் தாய் போன்று இனிய அமுதம் ஈந்து காக்க வல்ல ஒரு பெரு நதியுண்டு. சகல பாவம் பிணி, மூப்பு சாக்காடு என்பவைகளை நாசப்படுத்தும் அமிர்த சஞ்சீவிக் கொப்பானது. தெய்வத்தன்மை நிறைந்த உயரிய வான் நதியினின்று கொண்டுவரப்பட்டு மலய

முனிவனது கமண்டல வழியின்கண் விடுபட்டு வெளியாகி உலகம் புரக்க நிலவப் பெற்றது. வேண்டுநர் வேண்டிய வண்ணம், யாண்டும் மறுது எவ்வகைப் பலன்களையும் கருணையினாலே அளிக்கத் தலைப்பட்டது. எவர்க்கும் மேலான பேரின்ப வீட்டைத் தந்து இன்பம் பெருக விளைவிப்பது. இத்தகைய பெருமையினை வாயப் பெற்றதுவே காவேரி. அதன் மத்தியில் ஒப்பு உயர்வு இன்றி பார்ப்பவர் உள்ளத்தைப் புனிதப் படுத்த வல்ல தீர்த்தம் ஒன்று உண்டு. அதுவே, சற்குரு நாதனைக் காணவேண்டி ஏற்பட்டுள்ள 'இடப தீர்த்தம்' 'ருக்' முதலிய வேதங்களில் சிலாகித்துச் சொல்லப்பட்ட மகிமை பொருந்திய தலம். அதுவே நவகோடி தீர்த்தங்களும்வந்து படிந்து தத்தம் பாவங்களைப் போக்கிக் கொள்ள இன்றியமையாதது. அதுவே மூலமுதற்பொருளின் இருதய ஸ்தானம். அங்ஙனம் சென்று படிந்தாலன்றி எவ்வகைப் பாவங்களும் நீங்காதென்பது வேதவிதி. அதன் பெருமையை ஆயிரம் நாவுடையானும் சொல்லத்தரம் அல்லன் என்பது புராணக்கூற்று. நாங்களும் அவ்விடம் சென்று முழுகிப் பாவ அழுக்கினை நீக்கிக் கொள்ளும்படி பிறந்தது இறைவன் ஆணை. அதுபடியே நடக்கவேண்டிக் கடமைப் பட்டுள்ளோம் நாங்கள்.

கண்ணுவர்:—கங்கை யென்றுலகேத்தும் கடவுண் மாநதியே! அடியேன் செய்த அருந்தவமோ! முன்னவர் ஆற்றிய விரதமுடிபோ! இல்லாளிழைத்த நல்வினைப்பயனே! இறைவன் திருவருள் இங்ஙனம் பெண்கள் உருவாகி வந்து நின்று என்குலதும் ஈடேற வைத்ததோ! "வாடிய பயிர்க்கு வந்து-

தவிப புயலோ!" நீவிர் என் முன் காணப் பெற்றது. இனி நான் உய்ந்தனன், உய்ந்தனன்!" என்று பரவசமுற்று ஆனந்தக் கூத்தாடிநின்று "அம்மன்மீர்! நானெடுத்த பிறவி புனிதம் எய்தியது. 'பெரியவர் காட்சி உரியது உயிர்க்கு' என்றும், 'பெரியாரைத் துணைக்கொள்' என்றும், கூறியது எனக்கு நிதரிசனம் ஆயிற்று. இன்று பரோபகாரம் செய்யாதவர் பொருள்போல என் உள் அந்தகாரமும் பறந்து போயிற்று. நீவிர் கூறும் மாற்றம் ஒவ்வொன்றும் 'பசுமரத்தாணி' போல் செவிபுட்புகுந்து உள்ளத்தைக் களிக்கச் செய்கின்றது. எப்படி அத்தலம் வேதோக்தமானது? நந்தியம்பெருமான் மாட்டு இறைவன் வைத்த கருணையின் நோக்கென்னே? சர்வோத்கிருஷ்டமாகிய அக் தீர்த்தத்தால் உண்டாகும் பயன் யாது? அங்கு எங்ஙனம்விரதம் அநுட்டிக்கவேண்டும்? முறையென்னே? அதன் விவரம் அறிந்த பின்னர்தான், என் தவப்பேறு பலித்தற்கு இடமாகும்.

"ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து".

என்னும் பெருமகன் பொய்யாமொழி என்பால் சான்று ஆகும். உண்மை அறியாது இதுகாறும் 'விடமுண்டார் உள்ளம் போல்' மயங்கி யிருந்தனன். உம்பிடத்தே படிந்தாரது பாவங்களை யேற்றுக் கலங்கித் தெளியும் நீர்மைபோல் எனது அகக்குழப்பம் நீக்கித் தெளிவிக்கவேண்டும்." என்று இறைஞ்சி வேண்டினர்.

மந்தாகினி :— ஐம்புலன் அடக்கிய அந்தணர்பெரும! பூர்வம் தக்கனது மகளாகிய தாக்ஷாயணி என்னும் பெருமாட்டி வெறுப்பினால் உருக்கி அழ-

விருஷபமோ களர்நெறியிற் புகுந்து பற்பல விகார-மாய்ப் போகின்றது. அதனைக் கண்டு பயந்த எமது வாகனங்கள் யாவுந் தத்தம் மனம்போன வழியே செல்லுகின்றன. என்ன செய்வோம்,'' என்று பன்-முறை வந்தித்து முறையிட,

"செருந்துறும் மருள ளார்ந்த சின்மயத் தரணை மூர்த்தி
பொருந்தினை விடை வர்க்கறப் புன்னைய போதக மொன்ற
திருக்கிளர் விமலன் றானே சிறுகமுகத் தினைப் போது
வெருக்கிள ரிடபமேறு விரல் நுதிப் பாதலம் புக்கதன்றே'

என்றபடி, இறைவன் திருவுள்ளத்தில் அறிந்து தமது திருப்பாதங்களின் வலப் பாதத்தில் உள்ள விரல்-களில் பெரு விரலை ஏற்று அதன் முதுகிடை பொருந்தும்படி அழுத்தினர். அதனால் அவ்விட-பம் பாதாள லோகம் புகுந்து வருந்தி மனம் நொந்-தது.

பின்னர், அவ்வது திருப்பாதம் பட்ட திறத்-தால் ஞானம் பிறந்து, முன் நேர்ந்த செருக்கினால் அன்றோ இக்கதி நேர்ந்தது! நீள்வது எங்ஙனம்? இறைவன் திருவடியை என்று காணப் பெறுவேன். ஆறும் அற்ற அபலையாகி-னன். ஆண்டான் கோபத்திற்குக் காரணம் நம்மதி யாமையால் நேர்ந்த செருக்கு அன்றோ! உலகில் 'அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை ஆரிருள் உய்த்து விடும்' என்னும் பொருநாவலர் பொய்யா மொழி என்மாட்டு நிதரிசனம் ஆயிற்று. அவ்வாக்-கியத்தின் பொருளை உணர்ந்து "பொன்னேபோற்" போற்றப் படுவார்க்கன்றே விழுமியதில்லை. யான் விலங்கு ஆயினமையால் அல்லவா, தலைவனை விட்டு விலங்கல் ஆகினேன். என்னைப்போல் பேதைமை

நிறைந்தார் எக்கதையிலும் கண்டதும் இல்லை, கேட்டதும் இல்லையே. என் புன்மதி இருந்தவாறு என்னே! என் கொடும் அகங்காரிப்பினால் பகுத்துணர்வு அற்று "மீகாமனில்லா மரக்கலம் போல்" ஆயினன். "அவனருள் அற்றால் அனைவரும் அற்றார்." "அவனருள் உற்றால் அனைவரும் உற்றார்" என்பதைச் சற்றும் எண்ணினேன் இல்லையே. அந்தோ! என்செய்வேன். எனக்கும் இதுவோ விதித்த விதி. அரசன் தாய், தந்தை, குரு, பெரியோர் இவர்கட்கு அபசாரம் இழைத்தவர், என்றும் உய்ய வழியில்லை என்று மறைமொழி போலும் இடுமே. அதனினும், எல்லாம் வல்ல முழுமுதல் இறைவன் ஆணைக்கு மாறாக நடந்த எனக்கு எவ்வழியில் உய்யவழி நேரும்.

"உளவறிந் தொருவ னின்செய லாமென வுணர்ந்தோர்க
ளளவி லானந் தமெய்தி னா ரறிவிலாப் பன்மைக்
களவு நாயினேற் கிவ்வண மனமசத் தருத்தக்
குளரு முண்மையில் யாரொடு புகலுவேன் தாயோய்."

நின் திருவடிப் புணையின்றிப் பாவமாகிய பிறவிக்கடலை எங்ஙனம் கடந்து முத்திக்கரையேற முடியும்? "அவனன்றியோரணுவும் அசையாது" என்னும் ஆப்த-மொழி ஒன்றிருக்கின்றது அன்றோ! அதை உணர்ந்து அடங்கி அமைதி கொள்வார்க்குத் தானே எவ்வித சித்தியும் கைகூடவல்லது. பிள்ளை யறியாமையைப் பெற்றாள் அறிந்திருந்தும், மனம் இரங்காது இருப்ப-ளோ! யான் பரம்பொருளாய நின் சந்நிதியின்கண் இருந்தும், பொருந்தா வேழையாகினேன். உலகத்-தவர் அசத்தாயுள்ள பொருளே தாரகமாக் கொண்டு பரோபகாரம் புரியாது அசத்தாகிய வெந்நிரயத்தில் ஆழ்ந்து கிடக்கின்றனர். அவர் போல் எனக்கும்,

விதிப்பது நின்னருள் தன்மைக்கு அழகேயோ! எந்தாய்! எந்தாய்!

"சிறியோர் செய்த சிறுபிழை யெல்லாம்
பெரியோ ராயிற் பொறுப்பது கடனே"

என்னும் கட்பாடு நின்மாட்டு இன்றேல், எவர் தாங் கொண்டு நடப்பர். முன்னம் அகங்கரித்த இலங்கை மன்னனுக்கு இரங்கி உய்வித்தனை யன்றோ! தந்தையைக் கொன்று தாயைப் புணர்ந்த கொடும் பாதகனையும், கருணை கூர்ந்து ஆட்கொண்டனை. கல்லாலும், வில்லாலும் அடித்தவர்க்கும் இன்பந் தந்து மெய்வழி காட்டினை! என்றால், நின் கருணைக்கு ஒப்பு, உயர்வு அளவிடுதற்கு எவர்தாம் வல்லவர்? மக்கள் அறியாமையால் கெடுவது உலகிற் சகசமே! அவர் பிழை தீர்த்து உய்விப்பதாம் நின் திருவருளே. அடியார் பொருட்டன்றோ அலகில் விளையாட்டு எய்தினை! என்று பலவாறு "காரமுண்ட குரங்குபோல" மனமொழி மெய்கள் வேறுபட்டு "இடிகண்ட நாகம் போல்" அடங்கி யலமந்து இருந்து ஒருவாறு தேறி, மீண்டும், ஹே! தீனபந்து! ஆத்மரக்ஷக! ஆபத்பாந்தவ! கிருபாநிதே! "எளியாரை வலியார் வருத்தின், வலியாரை தெய்வம் வருத்தும்" என்பது இன்று எனக்குக் கண்கூடு. நின்னையன்றி எவர்க்கும் ஆதரவு இல்லை. ஆகலின் கொடியேன் செய்வினையைத் தமது திருவுள்ளத்தில் குறியாக் கொள்ளாது பொறுத்தருளுதி!

"பாதலம் புக்க காலைப் பாவியேன் செருக்குப் பூண்டு
சாதலங் கழையுந் துன்பந் தாங்கினே னவா வென்று
தீதலங் கிடப வேறு சிந்தை மாழாந்து தேம்பிக்
காதலங் கண்ணீர் வாரத் துதிபல கரைந்த தன்றே"

என்பதற்கேற்ப, இரு கண்களிலும் நீரருவி கடல் மடை திறந்தாற்போன்று வர நின்று, யாதுந் தோன்றாது திகைத்திருந்து பிரிவாற்றாமையால் மேன்மேலும் கவலை யடைந்து, பதியின் வழியுணராதும், அவன் ஆணை வழி நடவாதும், இந்த கொடும் பாவிபேற்கு என்று கருணை புரிகுவை? சிவ! சிவ! "திக்கற்றார்க்குத் தெய்வந் துணை யன்றோ! இது என்னே! உன் மனமும் இரும்போ! கல்லோ! இன்னம் பதுவோ" என்று,

"எனைத்தெண்ணமெல்லாம் எண்ணியெண்ணியேமாழ்கி நொந்து
புண்ணாகச் செய்ததினிப் போதும் பராபரமே" [ம்

என முறையிட்டு இரங்கிற்று.

அக்காலை, அதன் கூப்பாடு கண்ட பெருமான் "கன்றிற் கிரங்கும் ஆவைப்போன்று" திருவுளங் கனிந்து காருண்யங் கொண்டு பூமியின்கண் வரக் கடவையெனப் பணித்தனன். உடனே அவ்விடபம் மேல் எழுந்து நின்று இறைவனைக் கண்ணுற்று, அவன் திருவடிக் கமலங்களில் உடல் பொருள் ஆவி மூன்றும், மனமொழி மெய்கள் மூன்றும், ஆகிய இவற்றைத் தாரை வார்த்து நிலந்தோயப் பணிந்து நின்று,

"நின்னாவார் பிறரின்றி நீயே யானாய்
நினைப்பார்கள் மனத்துக்கோர் வித்து மானாய்
மன்னானாய் மன்னவர்க்கோ ரமுத மானாய்
மறைநான்கு மானா யாறங்க மானாய்
பொன்னானாய் மணியானாய் போக மானாய்
பூமிமேல் புகழ்தக்க பொருளே நின்னை
என்னானாய் என்னானாய் என்னி னல்லால்
ஏழையேன் என்சொல்லியேத்துகேனே." (1)

ஒன்ருயி ரண்டாகி மூன்ருகி யைந்தாகி
யோதுமா றெட்டு மாகி
யுணவுதவு பல்வடிவ மாய்சரா சரமாகி
யுலகமாய்க் கடலு மாகிக்
குன்ருகி வனமாகி மலராகி மருவாகிக்
கோள்களாய் நாள்க ளாகிக்
குருவாகி யருமறைப் பொருளாகி யதனின்வரு
குணமாகி மணம தாகி
நன்ருகித் தீதாகி யிவைகளுக் கயலான
நடுநிலை யாசாக்ஷி யாகி
நாதாந்த போதாந்த வேதாந்த சித்தாந்த
நவில்கலா னந்த மாகிக்
கன்ருகி யாவாகிக் கருகூலத் தொளிர்கிரண
கதிராகி யெதிர தாகிக்
கவினும்பரா தரியநிலை மருவுமொருபெரும! நினை
கனிப்பவர்க ளெவர்க ளோயே (2)

என்று பாடி தன்னை யாட்கொள்ளும்படி வேண்டிக் கொண்டது. அது அறிந்த இறைவன் நந்தியை நோக்கி "நீ யென்றும் இருகூருகி, ஒரு கூறு உலகத் தவர்கண்டு உண்மைவழி நடக்க இங்கிருத்தல் வேண்டும். எப்படியெனின், ஒவ்வோர் யுக தருமத்திற் கேற்றபடி இருந்து விளங்குவது நன்மை. கிருத யுகத்தில் நான்கு பாகமும் தருமம் நிறைந்து ஆன் மாக்கள் எளிதில்முத்திபெறக் கூடியகாலம் ஆதலால், நான்கு கால்களோடு நின்று உண்மை உணர்த்துவது முக்கியம். திரேதா யுகத்தில் மூன்றுபாகம் தருமமும், ஓர் பாகம் அதர்மமும் ஆகலான், மூன்று காலால் நின்றுகொண்டு ஓர் காலை மடக்கிக்கொள்

வது நேர். துவாபர யுகத்தில் இரண்டு பாகம் தருமமும், இரண்டு பாகம் அதர்மமுமாகலின், அதற்கேற்ற படி இருந்து ஜீவ கோடிகள் உய்யும் விதம் இன்னதென்று குறிப்பிடுவது கடினம். நான்காம் யுகத்தில் மூன்றரை பங்கு அதர்மமும் அரைப்பங்கு தர்மமும் ஆகலின், அதற்கியைய விருந்து உய்கைக்கு பந்தமறுந்து உண்மை ஞானமாகிய சிவஞானம், பரவைராக்கியம், முமுட்சுத்வம் ஆகிய இவைகளை தனித்தனி இன்னின்னவென விளங்கச் செய்வது காலமே மக்கு இட்ட கட்டளை. மற்றோர் கூறு எமக்கு வாகனமாக விருந்து தாங்கியிருத்தல் வேண்டும் என்றனர்.

அதுகேட்ட விருஷபம் தலையாது கைம்மாறு இன்றிய பெருங் கருணைக் கடலாகிய உமையாளங் களிக்கப் பெருமானை நோக்கி, "ஐயா, யாவும் இன்றிய உத்தம தெய்வமே! அடியேற் கிட்ட கட்டளையைச் சிரமேற்றுக்கொண்டனன். நான் பாதலத்தினின்று திருவருள் நோக்கினைப் போல் வந்த இடத்தின்கண் என்னால் ஏற்படுத்தப்பட்ட இத்தீர்த்தத்தில் யாண்டும் ஆன்மாக்கள் படிந்து ஒப்பிலா நின்கருணைக்குப் பாத்திரமாகி, எவ்வகைப் பேறுகளையும் அடைந்து, நித்யானந்த வாழ்வையடையத் திருவுள்ளம் வைக்கவேண்டுமென்பது எனது வேண்டுகோள். அதுவன்றி, இருவினையொப்பு, மலபரிபாகம் வருவித்து சத்திநிபாதங் கைகூடி நின் ஒப்பிலா திருவடியிற் கலந்து, இன்பம் அனுபவிக்கும் மேலான பரஞானத்தை உபதேசித்து, என் பிறவிப்பிணி போக்க நோக்கம் புரிய வேண்டுமென்பதே எனது பிரார்த்தனை," என்று கூறிற்று.

## முதல் முழுக்கு.

அதுபோது நந்திக்கு அறியாமை நீங்கி அறிவு மேம்பட்டதைப் புணர்ந்த தேவதேவன், அன்பு கூர்ந்து, "ஏறே! அன்பின் பாம்பு கண்ட சம்புவே! விரும்பி வேண்டும் வண்ணம் நீ பூமியின்மேல் வெளிவந்த துலாமாதத்தின் முதல் தேதியில், இத்தீர்த்தத்தில் படிந்து விதிப்படி அர்ச்சித்து வேண்டுநர்க்கு, இகத்தில் அடையவேண்டிய சகல பேறுகளுங் குறைவின்றிக் கிடைக்கும். தீர்க்காயுளும், சரீராரோக்கியமும், புத்திர சந்தானமும், நல்லறிவும், சுக்கிலபக்கத்துச் சந்திரனைப்போல்,' நாளுக்குநாள் வளரும். இங்ஙனம் தர்ப்பணங்கள் புரிந்து தானங்கள் செய்து வருபவர்களது பிதிர்கள் மேற்பதவியை யடைவார்கள். அவர்களால் அக்குல முழுவதும் நற்பேற்றை யடைந்து என்றும் நீங்காப் புகழினைப் பெறும். அன்று இத்தீர்த்தத்தின் இருமருங்கும் எமது காட்சி எய்தப் பெறுவர். மறுமையில் பதவிப் பேறுங் கைகூடும். இதுவே முதல் முழுக்கின் பிரயோசனம். இன்று தொட்டு இது இடப தீர்த்தம் என்று பெயர் பெறும். பிதுர் முழுக்கு என்பதும் இதுவே யாகும்.

## இடை முழுக்கு.

இனி நின் விருப்பம் நிறைவேற இம்மாதத்தில் வரும் அமாவாசையில் தென்முகப் பரமாசாரிய னாக வேதாரண்ய க்ஷேத்திரத்தினின்று நின் பக்குவ நிலைக்கு ஏற்ப, சேவை தந்து ஞானோபதேசம் செய்வேம். அதுபோது பெறுவை எந்நலமும். இன்று தொட்டு வைகறையில் மூழ்கிக் கடன்கள் யாவுங் கழித்துப் பார்த்திவ பூசையாற்றி, அடியார்க்கு

அன்னமிட்டு, ஒருபோது புசித்து, உண்மை யுணர்ந்த சாதுக்கள் வழிப்பாடு இயற்றி, அன்னவரோடு முப் பொருட் சோதனை செய்து, என்னை யிடைவிடாது மனனம் பண்ணி வருபவர்க்கே, குரு தரிசனம் உண் டாகும் என்பது வேதபிரமாணம். நீயும் அவ்வழி நிற்பையாயின் சற்குரு முகம் கிடைக்கும். ஞானோப தேசமும் பெறுவை. உண்மை யுணர்ந்து நித்தியா னந்த வாழ்வு பொருந்தும். அந்நாளே நன்னாள். அதைத் தாம் **தேவோக்த** நாள் என்பர். அதன்படி அத்தினத்தில் வந்து தெரிசித்தவர்க்குச் சற்குரு கடாக்ஷம் பெருகி அழிவில் பேரின்ப வீடு கிடைக் கும். எத்தகைய பாவங்களுங் கழியும். திருவருட் கடாக்ஷமும், எண்ணிய யாவையும் கைவரும். அத னால் எண்ணில் அஸ்வமேத பலன்களை சித்திக்கும் என்பது புராணக் கூற்று. இம் முறைக்கே சற்குரு ஸாந்நித்யம் உண்டாக ஏற்பட்டது.

## கடை முழுக்கு.

அதன்பின்னர் பிரதிதினம் மேற்கூறிய நியம னப்படி கடைவரையில் விரதாதிகள் அனுட்டித்து, இருந்து, விடைபெறுகுநரே மோக்ஷாதிகாரிகள். அவர்களே என்னன்பிற்கு உரியர். அவரே திருவடிப் பேறு பெற்றவர். அவர்க்கே பஞ்சமூர்த்தி சேவை சாதிப்பம். அதனை தெரிசிக்காதவர்க்கு எப்பலன் களும் கிடைக்கா. 'காட்டில் எறிந்த நிலவுபோலா கும்' அன்று சேவை செய்யாதது, என்று பணித்து அந்தராத்த மாயினர்.

அம்மொழி கேட்ட நந்தி, இறைவன் பிரிவாற்றா மை நோக்கி, "ஆவைப் பிரிந்த கன்றுபோல்" கதறிக்

கண்ணீருங் கம்பலையுமாகக் கலுழ்ந்து நின்று இருந்து அருட்பெருங் கருணைக் குரவனை என்று காணப் பெறுவன்? எங்ஙனம் அவன் திருவுள்ளம் உவக்கும்? சிற்றறிவும் சிறுதொழிலுமுடைய நாயேன் எவ்வாறு அவன் கருணைக்குப் பாத்திரமாவன்? அவனது திருவடிப் புணையின்றி எவர் நாம் முத்திக்கரையெய்துவர்? உலகில் பகவான் திருவடிப்பேற்றை யடையும் முயற்சி யன்றோ மெய்கண்டாரது கொள்கை. அத்தகைய மார்க்கம் இன்னதென உணர்த்தும் பெரியர் யாரோ? அக்குரு காசூழி என்று நமக்கு வாய்க்கும்?

"கரவிலாதபே ரன்பினுக் கெளிவருங் கருணைக்
குரவ னருளின்றியிக் கொடிய வெம்பாசம்
புரையில் செல்வியால் அழிப்பது புணையினா லன்றி
பரவு நீர்க்கடல் கரங்கொடு நீந்துவ தொக்கும்."

ஆதலின், அக்குருவருட் பேறின்றி ஒன்றும் நடவாதே. என்று திருவருள் கூட்டி முடிக்கும்? அத்தகைய பெரும் பேற்றைப் பெற்றுய்யும் பரிபாகம் என்று வந்தமையும்? நம்முள் எழும் ஈங்கை யனைத்தும் நிரத்தக்கதாகக் கேட்டுணர்ந்து தெளிவது என்றோ? அந்தோ! பசுத்வ வாதனை என்று ஒழிதருமோ அறிகிலன். காண்படு பொருளும், கருதுறு பொருளும் அழிபடு பொருளன்றோ! ஆகலின் நிலையாமை கண்டு துறவுபூண்டு, மெய்யுணர்ந்து, அவா நீங்கினார்க்கே ஊழ்வலி கூட்டுமென்றும்,

"சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்"

என மெய்யுணர்வெய்திய பெருமக்களிற் சிறந்தோராய புலவர் திலகர் கூறியுள்ளார் அன்றோ!

அதுவன்றி,

"நானார்என் னுள்ளமார் ஞானங்களாரென்னை யாரறிவார்
வானோர் பிரானென்னை யாண்டிலனேல் மதிமயங்கி
யூனா ருடைதலையி லுண்பலிதே ரம்பலவன்
தேனார் கமலமே சென்றூதாய் கோத்தும்பீ!

தோலுந் துகிலுங் குழையுஞ் சுருடோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியுஞ்
சூலமுந் தொக்கவளையு முடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ!

குனித்த புருவமுங் கொவ்வைச்செவ்வாயில் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போன் மேனியிற் பால்வெண்ணீ[றும்
இனித்த முடைய வெடுத்தபாதமும் காணப்பெற்றால
மனித்தப் பிறவியும் வேண்டுவதேயிம் மாநிலத்தே!"

என்பதற்கிணங்க, நான் இதுகாறும் நாம் யார்? இவ்வுலகாதிகளைப் படைத்தவன் யார்? அவன் என் படைப்பாதி புரியவேண்டும்? அவன் உண்டென்பதற்குப் பிரமாணமென்னை? எத்தகைய இலக்கணம் வாய்ந்தவன்? அவனால் எய்தும் பேறு என்ன? என்பனவாதி விஷயங்களைப் பரியாலோசித்திருந்தேனா? அதுவும் இன்று. அன்னணம் விசாரித்து அறிந்து உற்று உணர்ந்தார்க் கூட்டுறவிற் கலப்புற்று இருந்தேனும் இல்லை. "இரும்புண்ட மனம்போல்" ஆயினேனே யன்றி, ஒரு பயனும் பெற்றேன் அல்லன். இறைவனது திருக்கோலங்களை என்றும் நேரே கண்டு வழிபடுதற்குரிய பெரும் புண்ணியமும், பரஞான முதிர்ச்சியும், உடையவன் ஆகாது "கலந்து நின்னடியாரோடன்று வாளாக்கழித்திருந்தேன்" என்பது எனக்கே இன்று சான்று பகர்கின்றது. என்று அயர்ந்து 'திகைப்பூடு மிதித்தவன்போல்' அலமந்து வாடித் தாகமேலீட்டினால்,

"நெருப்பிலிடு வெண்ணெயென நெஞ்சுருக வென்னை
யுருக்குமிந் நாளெனை யொளிக்குமல வாற்றல்
கருக்குமவ னேகியெனை யாள்வனென வெள்ள
மிருந்துமிட னெயிலுன வெண்ணியவ னிருப்பது.

"ஞானு சிரியன் என் றுவந்து
நம்மு னுறையுந் தங்கையெலா
மானு விருப்பின் விளைய்வினை
அறையத் தெளிவ தெப்போது
மானு லவன்போ லருட் கிலக்காய்
வயக்கி யடிக்கீழ் வைப்பதென்று
தேனு கரிக்குஞ் சிவா னந்தத்
திளைத்தின் புறலென் றெனநினைக்கும்"

இங்ஙனமிருந்து வருநாளில் பெருஞ்சுமை சுமந்து வருவோன் அச்சுமையை இறக்கிவிட்ட பின்னர் எவ்வாறு உணர்வனோ, அவ்வாறு தமது வேதனை அனைத்தும் நீங்குதலைக் கண்டு மகிழ்ச்சியின் பெருமிதம் வெளிவரலாயிற்று. இரு விழிகளினின்றும் ஆனந்தக் கண்ணீர் தம்மை யறியாது ஆறாகப் பெருகியது. பஞ்சேந்திரியங்களுக்கும் இனியன தோன்றின. வலத்தனவாய கண்ணுந்தோளுந் துடித்தன. இனி உய்யுங்காலங் குறுகியது. அதனுல் ஏதோ நன்னிமித்தங் காண்கின்றேன், அமாவாசையும் இன்றன்றோ! பரமாசாரியனும் வந்து எய்துவரோ! பக்குவி அல்லவென்று கைவிடுப்பரோ! எது வந்து கூடுமோ திருவருள்விளக்கம்! 'அழலிடைப்பட்ட மெழுகது போல் நெஞ்சநெக்குருகக் கண்ணீர் வீழ்த்தி, எப்போதுங்காணுத காட்சியை இன்று காண்கின்றேன்' என்றிருக்குங் காலையில், கோடி சூர்யப்ரகாசமாகிய திவ்ய தேஜோமய ரூபத்துடன் வடபால் ஒரு பெரு

ஒளி காணப்பெற்றது. அதை நன்கு உற்று நோக்குகையில், ஆசாரியர், அநேக தொண்டர்குழாந் தம்மைச் சூழ்ந்துவர, வேண்டுவன செய்துறைய இடக்கரத்தே சிவஞானபோதம் வைத்துக்கொண்டு வலக்கரத்தே சின்முத்திரை காட்டித் தர்ம விடைமீது எழுந்தருளி வரக் கண்டார்.

அக்கால் 'அணையுடைத்தெழு நீத்தம்போல' அதிவிரைவாக வோடி 'அகர வுயிர்போல' நிகர் அற்று விளங்குந் தன்மையாகிய பரமாசாரியாது திருவடிமலரிடை வீழ்ந்து,

"நீதளப் பளிக்கு மேனியும் பளிக்குச்
செழுமலை பதித்த தாபன்ன
பாதமுஞ் செவ்வாய் மலருமுக் கண்ணும்
பங்கயச் செங்கர நான்கும்
வேதபுத் தகமு மமுதகும் பமுந்தன்
விழிமணி வடமுமெய்ஞ் ஞான
போதமுத் திரையுந் தரித்ததோர் தனிமைப்
போதன்முன் றழுந்தெழுந் தேத்தா"

என்றபடி வணங்கி நின்று 'ஹே! நந்தாமணியே! நச்சினார்க்கினிய! நான்மறைமுதல்வ! நாயகவிளக்கே! எளியேம் படுந்துன்பம் இனிது துடைக்கும் எம்பெரும! அடியேனையும் ஓர் பொருளாகக் கொண்டு ஆளவந்த கற்பக! இனி யான் முத்தி வீடெய்தினன். என்னினும் உயர்ந்தார் எவ்வுலகினும் இல்லை. இனி ஏழையேன் என்ன கைம்மாறு இயற்றற்பாலன். நின் அருட்கடைக்கண் நோக்கால் ஜீவபோத நிவர்த்தியும், சிவபோத ப்ராப்தியும், இன்றே யாங்கொண்

டேன், என்று துள்ளித் துடித்து அளவில் இன்பக் கடலில் குளித்துக் களித்து நின்று,

“இவ்வண்ணம் எண்ணிப்பெற்று மெண்ணுருவ தொன்றுமில்லை
செவ்வண்ண விவர்நம்மை யாட்கொண்டேற்ற நீரா[றே
நவ்வண்ணம் அவ்வண்ணம்போய் நசிசக வென்றோடிச்சென
அவ்வண்ணம் ஆயினுர்தம் அடிவண்ண மலர்நீபு வீழ்கவே”

அன்றே யென்ற னாவியு முடலு
முடைமை யெல்லாமுங்
குன்றே யனையா யென்னை யாட்
கொண்ட போதே கொண்டிலையோ
இன்றோ ரிடையூ றெனக் குண்டோ
வெண்டோண் முக்க ணெம்மானே
நன்றே செய்வாய் பிழை செய்வாய்
நானோ விதற்கு நாயகமே.
கண்ணா ரநுதலோய் கழலிணைகள்
கண்டேன் கண்கள் களிகூர
வெண்ணா திரவும் பகலுநா னவையே
யெண்ணு மதுவல்லால்
மண்மேல் யாக்கை விடுமாறும்
வந்துன் கழற்கே புகுமாறும்
அண்ணா வெண்ணக் கடவேனோ
வடிமை சால வழகுடைத்தே”

என்றபடி நினைந்து இளக்குதல் இல்லாத இரும்பை யொத்த என் மனத்தையும் தன்னிடம் வலிக்கும் இப்பெரியாரது திருவடிக் காந்தத்தின் தன்மையை எவ்வாறு புகழ்வேன். அது அன்றி ஆதரம் வேறில்லை யென்று வீழ்ந்து கிடந்தது.

அதுபோது, நந்திபின்மாட்டு இரக்கம் எய்தி தென்முகம் வீற்றிருந்துகொண்டு பக்குவியாகிய நந

திசை எதிர் இருந்து மந்திராக்ஷர முதலிய அத்துவாக்களைச் சோதனை செய்து, அவற்றை வெளிப்படுத்தித் தமது திருநேத்திரத்தால் அவரது அறிவினை மறைத்திருந்த மலஞ் சிதையுமாறு நோக்கி, அவரோடு தத்த சம்யோகஞ் செய்து, அவரது மாயாகாரியத்தையும் கன்மமலத்தையும் போக்கி, அழகிய வலதிருக்கரத்தை முடி, அவர்க்குச் சூக்கும பஞ்சாக்கரமாகிய மகா மனுவை உபதேசித்து நிற்குமுறை காட்டி, அவரது உயிரைக் காமாதும வன்னம் பாவனை பயிற்றி, உடலத்தொடு உயிரை வவ்விய பிரமநாடி வழியாகப் பதிற்றுக ஆதாரங் கடந்து, அந்தாழுக்க நிராதாரத்திற் குமேலாகிய துவாதசாந்தத்தின் மேலாக இரண்டற்று ஆனந்தம் அநுபவிக்கும்படி செலுத்தி, அவரைக் குற்றமற்ற தம் வடிவமே யாக்கி அவரது உடல், பொருள், ஆவி மூன்றையும் குருதக்ஷிணையாகத் தாம் பெற்றுக்கொண்டு, அவர் முடிமிசைத் தம் பாதஞ் சூட்டி, அவரது நுதலில் தமது நோக்கத் தாலே வெண்ணீறு சாத்திக் கழநீர்ப் பூமாலையை அவர்க்குச் சூட்டினார். அதனால் அவர் சிவாநுபூதிச் செல்வம் பெற்று நிறைய, "தேனும் பாலும் நெய்யுங் கன்னலும் அமுதுமாய்த் தித்தித்து ஊனும் உருக்கும்" தமது திருவாய் மலர்ந்து வேறு! நந்தி முனிவர் ஆணையின்படி இத்திருக் கோலத்தோடே மேற்கு முகமாகவிருந்து என்றும், இத்தினத்தில் இத்தீர்த்தத்திற் படிந்து வேண்டுநர்க்கு எமது காட்சி பெறுவதோடு நின் காட்சியுந் தந்து, அவரவர் பக்குவத்திற் கேற்ப, உண்மை நிலை பதியச் செய்து சத்திநிபாதங் கூட்டி உய்யும்படி செய்யக்கடவை என்று ஆக்ஞாபித்து மறைந்தனர்.

அது உணர்ந்த நந்தி யெம்பெருமான் இறைவன் பிரிவாற்றாமைக் கிரங்கி ஐயகோ! என்றழுதாற்றி, அவனியிடை வீழ்ந்து புரண்டு மீண்டும் எழுந்து,

மண்ணுறு யாருறு மனந் தழுவித் தடுமாறிப்
புண்ணுறு மெயனைக காணு துழல்கின்றேனைப் போதவருட்
கண்ணு லவைமுழுதுங் கரையநோக்கி யான்யாரென்
றெண்ணு வெனைத் தந்தா யெங்குற்றாயோ வெந்தாயே.

"மாசாய மறைக்கும் மலவலியும் நாளும் வேறின்றி
யாசாவி காரமல ராயினேனைப் பொருட்படுத்திப்
பேசாத வின்புருவி னின்றொடெனைப் பிணைவைத்த
ஈசா வெனையிங்கிட் டெங்குற்றாயோ வெந்தாயே"

என்று மொழிந்து, குருநாதன் இட்ட கட்டளையை ஏற்றுக்கொள்ளத் தாமுடையனே!? குதிரைக்கிடுந் தவிசை நாய்க்கிட்டதுபோல் இருக்கின்றதே. எக்குணங் கண்டோ, அடிகள் இப் பெரும்பேறு எமக் களித்தது. எனக்கு என்றும் ஆன்ம தரிசனம் உண்டாகி அதைப் பந்தித்த பந்த தரிசனமும், அதை தவிர்க்கும் சிவ தரிசனமும், இனிது அடையக் கலப்பு செய்தனையே! நின் உதவிக்கு யாது கைம்மாறு புரியற்பாலன். முன்னம் வதாரண்ய க்ஷேத்ரத்தில் உமையாகிய ஞானம்பிகைக்கு உண்மைப் பொருள் உணர்த்தியவன் நீயன்றோ! உலகில் ஆணவ மலத்தாற் கட்டுண்டு அலமந்து கிடக்கின்ற ஆன்மாக்கள் உய்வான் கருதி, அவர்கட்குத் தநு, கரண, புவன போகம் தந்து ஆட்கொள்ளும் ஆனந்த வடிவனாகிய நின் செயல் உணரவல்லார் எவர்தாம் உளர். "நிலத்தில் தோணியும், ஜலத்தில் வண்டியும் ஓடுமா?" அது போல நின் திருவருளன்றி இங்ஙனம் எவை தாம்

நடக்கும், என்று பலவாறு கூறிச் சகச நிஷ்டை கூடியிருந்தனன்.

"மறையொரு நான்கு நாற்கான் மயிர்கள் சாத்திரமனைத்து
குறைவில் வாலகள வதத்துக் கொம்புகள் சிவசொரூபம்
நிறைதரு சுருதி யோடு மிருதியு நேத்தி ரங்க
ளுறைதிருப் பிரண வஞ்சு வாசமாங் கொளிமேற் றிற்கே.

மதவிழி லுமைசொ ரூபம் வரன்முக மலரின் மேயோன்
சுழமிலா கமங்க ளெற்றி தொக்கமுன் காலின் மூலம்
பதமிகு தீர்த்த மெல்லாம் பைந்நுராய் கொண்டல்கண்ட
முதவுறு தியான முஞ்ச மாதியு மோங்கு காது.

மற்றுள வமர ரெல்லா மற்றுள வுறுப்பெ லாமாய்க்
கொற்றமிக்கமருமேற்றைக்கொண்டன் மேனியன்முன்னுய
மற்றவை வானோ ரெல்லாம் வந்தடி பரவிப் போனார்
சொற்ற மற்றார்க்கு மூர்த்தித் தொழுதியுந் தொழுத வந்து."

இந்த நோக்கைக் கண்ட தேவர்களும், அவரது வாஹனங்களும் வந்து பணிந்து விடை பெற்றுப் போயினர். அதுமுதல் இன்றளவும் அங்கிருந்து ஆண்டான் கட்டளைப்படி, சகல பாபங்களையும் போக்கி நன்மை யளித்துக் கொண்டுவருகின்றது.

அத்தீர்த்தத்தில், முன்னொரு கற்பம் மூன்றரைக் கோடி நதிக் குலங்கள் தந்தம் பாவங்களைப்போக்கிக் கொள்ள வழிதெரியாது மலங்கிப், பின் ஒருங்கு கூடி முதல்வன் இடம் அடைந்து முறையிட அன்னோன் கருணை கூர்ந்து விதித்தது அந்த இடமே. ஆண்டு அடைந்து மூழ்கித் தத்தம் பருவமியாகிய பாவங்களைக் கழித்து நன்மை யடைந்தன என, மறைமொழி கூறும். பின்னும், குடகுநாட்டு அரசனாகிய கவேரன் மகள் காவேரியம்மன், நதிரூபம் பெற்றுச் சென்று மூழ்கித் தமக்கு நேர்ந்த பாவங்கள் யாவும்

ஒழித்துச் சகல புவனங்களும் போற்றத் தகுந்த உன்னத நிலையினை யடைந்து ஜீவ நதியாகவிருக்க அரும்பெரும் வரம பெற்றனர். அங்கு நடந்த மகத்துவங்கள் இன்னும் பல. அதை விரிக்கின் பெருகும். எங்கட்கு அவகாசமு மின்று. துலாமாத அமாவாசையும் நெருங்கிற்று. குரு தரிசனமும் காணப்போகின்றனம்" என்று மந்தாகினி கூறினள்.

கண்ணுவர்—இவ்வற்புதத் தன்மையை அறிந்த தாரையாகப் புகட்டிய நதிக்குலத் தெய்வமே! மூவுல கேத்தும் முழுமுதற் கற்பே! ஆன்றோர் புகழும் அற் புதக் கனியே! பொய்யா மொழிசொள் புண்ணிய விளக்கே! எண்ணிய எண்ணம் யாவும் முடிந்தது. என்னுள்ளக் கமலங்கள் தளை யவிழ்ந்து அன்புநறை யொழுகிக் காமழ்ந்தன. புளகுடம்பு எய்தினன். இன் றுதான், என் தவம் பெரும்பேறு அளித்தது. இனி சிவானந்தப் பேற்றை வாரி முகந்து உண்டு தேக்கெ றிந்து குதூகலங் கொண்டனன். ஆயினும், இன்னும் அத்தீர்த்தத்தில் பல மகத்துவம் என்று அறிக்கையி ட்டனர் அன்றே. அவற்றுள் முக்கியமான வைபவம் இருக்கின் அதையும் என்மீது கருணைகூர்ந்து உரைத் தருளல் வேண்டும். அதுவன்றி, மூர்த்தி, தலம், தீர்த் தம், சற்குரு இவைகளின் மகத்வம் எங்ஙனம் அறிந் தீர்? அதன் விபரம் யாது? என் சிந்தை களிக்கும் வண்ணம் தயவு புரிவீர்கள் என விறைஞ்சி வேண்டி நின்றனன்.

மந்தாகினி:—அன்பின் வரம்பினை யறிந்து ஒழு கும் அந்தணர் ஏறே! காணவுங் கருதவுங் கூடாப் பரம்பொருளின் இயற்கை நலங் கண்டு உணர்த்த வல்லார் எவர்தாம் உள்ளவர். அவரது அன்பின்

பெருக்கை நிலைபிட்டு ஆய்வதற்குத் திருவருள் அன்றி எவற்றாற் கூடும்?

"ஒருருவம் ஒருநாமம் ஒன்றுமில்லான் றன்னைப்பாடி
ஆயிரந் திருநாமஞ் சொல்லித் தெள்ளேணங் கொட்டாமோ."

என்று சிவாநுபூதிச் செல்வருங் கூறி யிருக்கின்றனர் அன்றோ! ஏனெனின், அன்னான் அசேதன வுருவமாகக் காணப்படுபவன் அல்லன். இந்நால வுலகம்போல் தோற்றப்படுபவன் அல்லன். அவற்கு அசேதன அருவப் பொருள்களாய வாயு, ஆகாயம்போல் உணர்ந்து உரைக்கப் படுவதுவும் தோன்று. சேதன வருவ வான்ம தத்வம்போல் அறிந்து, அனுபவிக்கப் படுவதுவுமன்று, அவனது இலக்கணம். காண்பதற்கு எல்லாம் அப்பாலாய்க், கேட்பதற்கு எல்லாம் அரிதமாய், நிற்பது அவனது உண்மை நிலை. மனவுணர்வு சென்று பற்றுதற்கு அப்புறமாய் அறிவினுள் அறிவாய், ஆன்மாவினுள் அந்தரான்மாவாய், உரையளவு சென்று முடிவிடங் கடந்ததாய், இருப்பதே யப்பொருள் நிலையம். சர்வ உலகங்களும், சர்வ வண்டங்களும் சர்வ வான்மாக்களும், தனது சிற்பர சிதாகாச வியாபகத்தின் கண்ணே மடங்கி யடங்கிக் கிடப்ப, அவற்றின்மேல் விரிந்து சென்று முடிவிடம் அறியப்படாத வ்யாபக முடையதாய், ஞான மங்கள சொரூப சுலக்ஷணமுடையதாய், சர்வசக்தி நிறைந்து, ஆனந்த நிரம்பித் ததும்பு்ந் திப்பிய சாகரமாய், விளங்கும் முழு முதற் கடவுளை யுற்றுணர்ந்து அறிந்து ஆய்தற்கு அவன் வல்லபம் அன்றி யவரால் முடியும்.

அதுபற்றியே, சிறுகிய அறிவுங் குறுகிய தொழிலும் நனுகியறிந்து அதனையும் மறந்துமறந்து அறித

னும், மயங்கி அறிதலும் உடைய, கிஞ்சிஞ்சராகிய ஆன்மாக்கள் உணர்ந்து வழிபடுதல் கூடாமையால், அருட் பெருங் கடலாய அவ்விறைவன், தன்னை அவ் வான்மாக்கள் உணர்ந்து உபாசித்து உய்யும்பொருட்டு, ஒரோர் காலங்களில் ஒரோர் இடங்களில் ஒரோர் அன்பர்க்குக் கன்றை நினைந்தூட்டும் புனிற்றாப்போலவும், விறகின்கட் பிறந்த தீப்போலவும், மோரின்கட் டிரண்ட வெண்ணெய் போலவும், வித்தின்கட் பிழிந்தெடுத்த எண்ணெய் போலவும், வெளிப்பட்டு அவர்க்கு அநுக்கிரகஞ் செய்து வருகின்றனன்.

அக்கால், அவனது அருட்கருணைத் திருக்கோலங்களை மெய்யன்புடையராகி மனவொருமைப்பாடுகொண்டு தியானஞ் செய்து நாவுரை குழறக், கண்ணீருங் கம்பலையுந் தங்குறிப்பு இன்றியே நிகழவுபாசித்து வழிபட்டுச் சிவபோத நிவர்த்திச், சிவபோதப் பிராப்தி யடைந்து, நித்யானந்தம் எய்துகின்றனர். அவர்களுள், ஒருவனுக்காக கலியுகத்தில் காட்சி யளித்து உலகம் உய்யுமாறு ஏற்பட்ட மூழுக்கு ஒன்று இருக்கின்றது. அது எல்லாவற்றினும் முக்யமானது. அதன் விசேஷம் செப்பத்தரமல்ல. ஆயினும் சுருக்கிக் கூற எண்ணுகின்றனன். அமைதியாகக் கேட்குதல் வேண்டும் என்றனள்.

கண்ணுறுவர் — உத்தம தெய்வ வநிதா ரத்நமே! அடியேனிடத்து இவ்வளவு அன்பு பெருகினது எது பற்றி! அநந்நன்றிக்கு எதிராமாறு என்னால் என் செய்யக்கூடும்? கேவலம் ஓர் அற்ப மானிடன் பொருட்டு பெருமான் இரக்கங்கொண்டு வந்தது என்ன கருணை மேலீடோ! யானும் என் மனைவியும் இன்றே உய்ந்

தனம். இதைக் காட்டினும் செவியுணவு வேறு வேண்டுமோ! அத்தீர்த்த விசேடம் எங்கும் இல்லை என்பது உங்கள் வாய்மொழியே எனக்கு உறுதிவர மெய்ப்பித்தது. அதனைக் கேட்ட பின்னரே என் மனம் நித்யமெய்தும் என்று பணிவாக வேண்டியிருந்தனன்.

மந்தாகினி — தவத்தினர்க்கு இறையாய தவமுனிவ! அம்முழுக்கின் பெருமையை சிறிதாகூறக் கேட்டருளும் என்று, சொல்லத் தொடங்கினள்.

## முடவன் முழுக்கு

எல்லா வளங்களுக்கும் வைப்பிடமாய், இறைவனே மதுரைநாடு நடுநிலை திறம்பாது செங்கோலோச்சி புரந்தருளி பற்பல அற்புதத் திருவிளையாடல்கள்புரிவதற்கு உறைவிடமாய், விளங்கிய பாண்டிநாடு ஒன்று தென்றேட்டின்கண் உள்ளது.

அவற்றுள், சீரிய செல்வம் வாய்ந்த குபேரநகருக்குச் சமானமான தேவநகரம் என்னும் பெரும்பதி ஒன்றிருக்கின்றது. அதன்மேற் பாங்கர் அரிவைக்களம், என்று ஓர் சிறு கிராமம் உண்டு. ஆண்டு தனவைசிய குலத்தில் சாஞ்சல்யன் என்னும் பெருமகன் ஒருவன் இருந்தான். அவன் தொழில் குடிமக்கட்குப் பணம் கடன் கொடுத்துக் கடுவட்டி வாங்கி வருவது. நாளாவர்த்தியில் எளியவர் சொத்துக்களைக் கவரவேண்டுமென்பதே அவனதுசிந்தனை. பூததயை யில்லாது தப்புக் கணக்குக் காட்டித் தொகையேற்றி அயலார் மனம் "பாலைவனம்போல்" கொதிக்கச் செய்து கடுஞ்சொற் சொல்லி நெருக்கி

வருத்தி வாங்கி வருவான். அதனால் அவனைத் தரா தரம் அறியாக் கிராதகன் என்றும், 'பூலோக தூம கேது' என்றும், எவரும் பெயரிட்டு அழைப்பார்கள்.

அவனிடத்து உண்மையோ எண்மையும் இல்லை. தருமம் என்பது கனவிலுங் கேட்டு அறியான். பொல்லார்க்குள் வல்லவன் அவனே. பரத்தையர் பாதம் அருத்தி செய்ய மிகக் கருத்து உள்ளவன். அவரது இன்பமே பேரின்பம். அவன் கண்டதே காட்சி. கொண்டதே கோலம். அவன் அருந்தாத லாகிரி வஸ்துக்கள் இருந்தமிழ் உலகில் இல்லை. ஓடும் வண்டியும் பறக்கும் காற்றாடியும் அன்றி, ஏனைய பொருள்கள் எல்லாம் அவனுக்கு ஆகாரம். பொல்லார் சம்சர்க்கமாகிய கூட்டுறவினால் அழுநோய்க் குட்டம் கண்டு நாற்றமே வடிவாக மேன்மேலும் பெருகி கைகால் குறைந்து நடக்க முடியாத அவ்வளவு துன்பத்தை அடைந்து வருந்தல் ஆயினான்.

இது நிற்க, அவன் பூர்வம் இழைத்த புண்ணிய பலன்கள் யாவும் வடிவெடுத்து வந்தாற்போல சில சாதுக்கள் பாரெங்கும் பரவி புண்ணிய தீர்த்தங்கள் ஆடி ஆண்டுவந்து எய்தினர். அவர்களைக் கண்ணுற்றமுடவன் 'அனலிற் பட்ட அரக்கு' போன் மனமுருக மயிர்க்கூச்செறிய, நாத்தழு தழுக்க அளவில் இன்ப வெள்ளத்தாண் முழ்கினனாய், அட்டாங்க பஞ்சாங்கமும் நிலத்திற் றோயப் பணிந்து, எழுந்து சென்னியிற் கூப்பிய கையை யுடையவனாய் நின்று வணங்கி, "ஹே! புண்ணியர்காள்! பொய்ம்மைத் தவிர்த்து மெய்யுணர்ந்த மேதாவீர்! அடியேன் படுங்கஷ்டம் எந்நாளினும் கண்டும், கேட்டும் இரீர். என் குறையை யார்பால் எடுத்துரைப்பன். யானோ கொடியரிலுங் கொடி

யன். பாவியினும் பாவி. எம்போன்றர் எவ்வுலகினும் இல்லென்பது அநுபவ சித்தம். வேறு கூறின் யாது பயன்.

இனி முத்திரய லக்ஷணம் உணர்ந்து உண்மை வழிநின்ற உமது சேவையினுல் கடைத்தேற வேண்டுமே யன்றி, வேறு ஆதாரம் இன்று. இக்கொடு நோய் நீக்குதற்கு எவ்வித உபாயமும் என் சிற்றறிவிற்கு எட்டியது அன்று. எம் முன்னேர் இயற்றிய விரதபலத்தினுல் உம்மைக் காணப் பெற்றனன். இதுகாறும் அகதியாய் வாணுளை வீணுளாய்க் கழித்துச் சமயக் கொள்கையர் மனமென, மெய்ம்மை யுணராதும் சிரியர்களை வழிப்படாதும், கற்றேர்களைக் கனப்படுத்தாதும், நிலையில் பொருளை நிலையென மருண்டு, உடல்வலி தடிப்பைப் பற்றுற்று நோக்கி, அரத்தா நின்றவர்களில் என்போலும் பேதையர் எங்ஙனும் இல்லை யென்பது யாவரும், தெள்ளித் தெளிந்த கண்கூடு. அஃதே என் வலியைக் குறைத்து அறிவை மறைத்து இழிவு படுத்தும் கூரிய கூற்றம். ஆகலின், பெருமக்களாய நீவிர் கிருபாநோக்கம் புரிந்து எம்மாட்டு அருள் பாலிக்கவேண்டும்" என்று பலவாறு இறைஞ்சி சிந்திய மூக்கும் வடிந்தநீர்க் கண்ணனுமாய் நின்று வேண்டினன்.

அவனது பரிதாப நிலையைக் கண்ட மகரியர்கள் கருணை கூர்ந்து "ஹே! வணிக! நீ தொன்றுதொட்டு அசத்தாய பொருளின் ஈட்டத்திலேயே நாட்டம் வைத்துத் தேக வின்பமே தெய்வமெனக் கொண்டாடி மெய், வாய், கண், மூக்கு, செவி யென்னும் ஐம்புலன்களிலும், பஞ்சகோசக் கருவிகள் நிறையப்பட்டு உடல் தடித்து பர்வதா கிர்தியாய்ப் பூமிக்குப் பார

மாக இருக்கப் பெற்றனை. அதனால் அறத்துறை என்பது அணுத்துணையும் அறியாதும், கற்றவர், நற்றவர், ஏழை எளிவர் முதலியவரைப் பொருட்படுத்தாதும், அவர்களை உபசரிக்காதும், அவர் மொழி கொள்ளாதும், நீ இருக்க நேர்ந்தது. ஏனெனின்,

"இளமை கழியும் பிணிமூப்பு வந்திறையும்
வளமை வலியிவை வாடும் — உளநாளால்
பாடே புரியாது பால்போலுஞ் சொல்லினாய்
வீடே புரிதல் விதி."

என்னும் இத்தகைய உண்மை உணர்ந்தார் கூட்டுறவு இருந்தாலன்றோ, நல்வழிப் படப்போகின்றனை! அறிவுடையார் கூறும் தருமம் உனக்கு வேப்பிலைக் கியாழம். நன்மக்கள் குழாமிற் கலந்து சீரிய கல்வி நிரம்பப் பெற்றவர்க்கே நன்மை யெய்தும் என்பதே ஆப்த வாக்யம். அதுவே எய்ப்பினில் வைப்பு. அறநிலை. செவ்விய வாழ்வினை யளிக்கத் தக்கது. "தொலையாப் பெருஞ் செல்வத் தோற்றத்தோமென்று, தலையாய்" செருக்குற்று இறுமாந்து இரையுண்ட வரைநாகம் போன்றுஇருந்தனை! ஹே! பாபீ! 'பொருட் செல்வம் பூரியார் கண்ணுமுள,' என்பதைக் கேட்டும் இருக்காய் போலும். அந்தோ! பாபம்! பாபம்!

"அடிகரி தொடர வீழ வைந்தலை நாகங் காண
விடிகிணற் றறுகின் வேரைப் பற்றிநான் றிடவவ் வேரைக்
கடிகவோ ரெலியும் வந்து கறித்திட வதினின் றேனுக்
கிடைதுளி தேனக் கின்பம் போலுமிப் பிறவித் துன்பம்."

என்பதை உணராது செருக்குற்றுப் பாழாயினை. கல்வி நலம் பெற்ற பெரியார் வரவைக் கண்டு எதிர்சென்று போகாத கால்களன்றோ, முடமாகிக் கமர்வெடிப்பு

ஆயின. அன்னவரை வணங்கிக் கூப்பாக் கரங்கள் இரண்டும் அழுகி நிணம் ஒழுகப் பெற்றன.

இம்மனிதப்பிறப்பு எய்துவது எவ்வளவு அருமை? அப்படி அடைந்தும் இதனால் ஒரு பயனும் அடையாது இருத்தல் நன்றே! நாவாய் முதலியன இன்றிக் கடலைக் கையால் நீந்திக் கரை காண்பதுபோலன்றே இருக்கின்றது உமது வீண்முயற்சி. இவ்வளவு அரிதிற் கிடைத்ததாய இம்மானிட தேகமோ இன்னகாலத்தில் தான் அழியும் என்பது இல்லை. கருவினுள் தானே கழிவனபல. பல தோன்றியவுடன் ஒடுவன. பாலப் பருவத்தும் பல. தருணப் பருவத்தும் பல. முதுமையினும் பல. வரும்பிறவியோ மானிடப் பிறவிதான் என்பது நிச்சயம் இல்லை. நாம் இவ்வுலகில் எவ்வளவு பொருள் தேடினும் என்ன! அதனால் நமக்கு நிலைபெற்ற இன்பஞ் சித்திக்குமா! நமன் ஓலை வரின் இப்பொருள் தடைசெய்யுமா! ஒருகாலும் உதவுதல் இல்லை என்பது அறியாதவர் யாவர்? உலகில் பிறந்தார் 'நோயற்ற வாழ்வும் குறைவற்ற செல்வமும்,' படைத்து இம்மைப் போகம் யாவும் அநுபவித்து மறுமைப் பலனைத் தேடுவது தாம் காரியம். அஃது இன்றேல் எங்ஙனம் உய்ய முடியும்? ஆதலால் நீ பிழைக்கும் வழி தெரியவேண்டும் என்னும், உத்தம எண்ணம் உமக்குள் உதயமாயிருக்கின்றது என்று எண்ண இடம் உண்டு. ஏனெனின் பூர்வம் நீ பண்ணிய புண்ணியம் அளவிறந்தன. அதனாற்றான், நாங்கள் உன் முன்பாக வரப்பெற்றோம். உனது சங்கடமும் இன்றோடே ஒழிந்தது. இனி கவலையுறற்க. என்று எம்பால் தஞ்சம் அடைந்தனையோ! அன்றே, இம்மை மறுமைப் போகங்கள்

வந்து எய்தின. சத்தை யடைந்தவர்கள் சத்தாக விளங்குவர். அசத்தாய் உள்ளவர்கள் அசத்தாகக் காணப்படுவர் என்பது வேதவிதி.

அதற்கு அநுகூலமான உபாயம் ஒன்று உண்டு. அதன்படி நடப்பை யாளுல் சகல நன்மையும் பெறுவை. அதுதாம், "உலகில் விவேகிகள் காட்சியின் பாற்பட்ட வின்பம் அனைத்தும் பொய்ம்மை என நீத்து அறியும் உண்மை நிலை." அதனால் ஆன்ம விசாரம் உண்டாகி அதிதீவரதர பக்குவம் உண்டாகும்.

என்னும், ஆகம வசனங்களால் நன்கு அறியலாம். அப்போது சத்திநி பாதம் உண்டாகும். பின் மலத்தினுடைய சக்தி நீங்கும். அது நீங்கப் பெற்ற ஆன்மாவிற்கு விரைவில் சம்சாரத்தில் விரக்தி யேற்படும். கடவுளது திருவடியில் இச்சை பதியும். முதல்வனை எப்போழ்து காணப்போகின்றேன்; பிறவிக்கு ஏதுவாகிய பந்தத்தினின்று என்று விடுபடுவன்; அங்ஙனம் செய்து வைப்பவர் யார்? அது எங்ஙனங் கூடும்? என்று இவ்விதம் புத்தி உண்டாகும். அக்கால், எவ்வித பிணியும் ஒழியும்; அழிவில் பேரின்பத்தை யடைந்து நித்யானந்த வாழ்வைப் பெறலாகும். இவ்வழியன்றி இந்நோய் தீர்ந்து உய்ய வழியில்லை. ஆகையால் அவ்வினை முடித்தற்கு ஏற்ற வசதி ஒன்றிருக்கின்றது. அங்ஙனஞ் சென்று இப்பிணி ஒழித்தற்கு உபாயந் தேடவேண்டும்.

ஞாலங் கருதினுங் கைகூடுங் காலங்
கருதி யிடத்தாற் செயின்."

என்று தேவரும் கூறியுள்ளதை யறியாய்போலும் என்று கூறினர்.

அதுகேட்ட வணிகன் சாதுக்கள் முகத்தை ஏறிட்டுப் பார்த்து, "அடிகாள்! என்ன புண்ணியமோ உமது தரிசனங் கிடைக்கப் பெற்றது. என் அறியாமையால் அன்றோ! இத்தகைய நோய்க்கு ஆளாகி, இம்மைப் போகத்தை முற்றும் இழந்து, மறுமைக்கும் ஒன்றும் அற்றவனாகினேன். தேவிர் அன்றி என் காமானுபவத்தை மாற்றுபவர் யார்? பெரியார் உரை கொள்ளாததனால் அன்றோ! எரிவாய் நிரயத்திற்காளாயினேன். இப்போழ்து தாங்கள் செய்யும் உதவிக்கு என்ன கைம்மாறு ஆற்றுகேன். திக்கில்லார்க்குத் தெய்வந் துணை," என்பர் அறிவுடையோர். இன்று அது எனக்குப் பிரத்யக்ஷமாயிற்று. அடிமைமாட்டுக் கருணை கூர்ந்து உய்வதற்கு ஏற்ற இடம் எங்குள்ளது. அதன் மகத்துவம் யாது? கூறியருளல் வேண்டும்," என்று இறைஞ்சி வேண்டிக்கொண்டனன்."

அக்கால், அப்பெருமக்கள் மனம் இரங்கி "ஹே! அன்ப! பூர்வம், பிரமன் தபமியற்றிச் சிருட்டி வகையறிந்ததும், தக்கன் விரதம் ஆற்றிச் சகல வரங்கள் பெற்றதும், யாகம் இயற்றியதும், அது சங்காரமானதும், உமை மயிலாக வுருவெடுத்து பூசை செய்ய ஆண் மயூரமாக சிவபெருமான் வந்து மணந்ததும், தேவர்கட்கு நடனஞ் செய்து காட்டியதும், நாற்றிசையும் பெருமான் வள்ளல் எனப் பெயர் பூண்டதும், சத்த மாதர்கள் அதன் பாங்கர் புரங்களேற்படுத்தி ஆலயப்பிரதிட்டை செய்து பூசித்து வந்ததும், யானை யுரித்ததும், நந்தியானவர் செருக்கு அகன்று பூசித்துக் குரு தரிசனம் பெற்று உபதேசங்கொண்டு நிலையாய் இருக்கப் பெற்றதும்,

"ஸ்வர்ண வர்ண ஜடாபாரம் ஸாக்ஷாத் ருத்ரமிவா பரணம்
பஸ்மோத் தூளித ஸர்வாங்கம் த்ருஷ்டிவா காமவ சங்கரா."

என்றபடி, திருக்கோலங் கொண்டு சிஷ்யர்கட்குப் போதித்துக் கிரியாமுறை திறம்பாது நடத்திவர வில்வாரண்யமாகிய தருமையில் தம்மரபு ஓங்கி விளங்க வைத்ததும், சயதுங்கன், திலீபன், கலைமகள், இலக்குமி அரவிந்தை, யானை, காசம் இன்னும் மற்றுமுள்ள பசுக்கள் அங்குள்ள தீர்த்தத்தில் மூழ்கிப் பேறுபெற்றதும், ஆகிய ஒருதலம் சோழநாட்டில் உண்டு. அங்ஙனஞ் சென்று ஐப்பசியாகிய துலாமாதத்தில் ஏற்பட்ட முதல், இடை, கடை ஆகிய முழுக்குக் காலங்களில் இடப தீர்த்தத்தில் தோய்ந்து அம்மாத முற்றும் விரதம் ஆற்றி நியமனப்படி பூசித்து வருவையாயின், இருநோய் தீரும். குரு கடாக்ஷம உண்டாகும். முக்தியும் எய்துவை. இதுவன்றி வேறு உபாயம் இல்லை. நாங்களும் அங்கு செல்கின்றோம்." என்று, விடை பெற்றுக்கொண்டு சென்றனர்.

அதன்பின்னர், அவ்வணிகன் தனது செல்வம் அனைத்தும் நல்வழியில் விநியோகப் படுத்திவிட்டு துறவுபூண்டு துலா முழுக்குக்குச் செல்லல் வேண்டும், என்னுங் கருத்துடையவனாய் ஊண் உறக்கம் இன்றி புறப்பட்டு அநேக ஆறுகளையும் சிற்சிறு குன்றுகளையும், கிராமங்களையுந் தாண்டி வடமதுரைக்கண் வந்து அடைந்தனன். அப்போது துலாமாதத்தில் ரிஷப தீர்த்தத்திலிடம் வந்து படிந்து போகிறவர்களைக் கண்டு கேட்டு மிக்க துக்கங்கொண்டவனாகி ஹே! தீனபந்து! ரக்ஷக! நின் திருவருள் என்னை இன்று உமது தரிசனம் காணக் கூட்டாதது என்ன கொண்டோ!

மனமொழி மெய்கள் ஒருங்குபட நின் திருவடியே தஞ்சமெனக் கொண்டு வருகின்றேனே! என் செய்வேன் ஏழை; கால் இன்றிய முடவன் ஆனதினால் அன்றோ அங்கு விரைவில் வந்து சேர முடியவில்லை. என்குறை காணக் கண்ணில்லையோ! வாடிவருந்தி அமாவாசை முழுக்காவது சித்திக்குமோ! திருவுள்ளம் யாதோ! என்று புரண்டு உருண்டுகொண்டு மலைக் கோட்டைக்கு வந்து சேர்ந்தனன்.

அக்கால், திரளான ஜனங்கள் கூட்டங் கூட்டமாக வருவதைக் கண்டான். அவர்பாற் சென்று ஐயன்மீர்? நீவிர் எங்ஙனஞ் சென்று வருகின்றீர்! உங்கள் முகதேஜஸ் ஆனது மிகு உல்லாசமான விளக்கங் காட்டுகின்றதே. சிவபெருமான் காட்சிகண்டவர்போன்று இன்று என்னெதிர் படுகின்றீர்களன்றோ! யாது விசேஷம்!

அதுகேட்ட யாத்திரை வாசிகள் பங்குவை நோக்கி, "ஹே! முடவ! நாங்கள் மாயூரஞ்சென்று துலாக் கட்டத்தில் உள்ள இடபதீர்த்தத்தில் நேற்றுத் துலா அமாவாசையில் ஸ்நானஞ் செய்து குருதரிசனமுங்கண்டு பரிசுத்தராக வருகின்றனம்." என்று, இனிய மொழிகள் கூறினார்.

அதையுணர்ந்த முடவன் கதுமெனத் துள்ளித் துடித்து மெய்பதைத்து நெஞ்சு உலர்ந்து நாத்தழுதழுக்கக் கண்ணீர் ஆறாய்ப் பெருக நின்று ஹே! ஜெகதீச! பார்வதிரமண! பக்தரக்ஷக! எம்மாட்டு மட்டும் கிருபை யிங்ஙனம் இருந்ததுவோ! அடியார்க்கு நல்லன் என்று, எழுதா மறைக்கிளவி இன்றும ஒலம் இடுகின்றதே. என் குறையை யார் பால் எடுத்துரைப்பன். சார்பிலார்க்குத் தனித் துணை

யாகிய நின்னருள் என்னைக் கைவிட்டு விட்டதுபோ லும், என்று கோவென அலறி, புரண்டு அழுது நிலத்திற் கிடந்தனன். பின்னர் ஒருவாறு தேறி கடைமுழுக்காவது கொடுத்து வைப்பரோ! அன்றே னும் நின் சேவைக்குப் பாத்திரமாகற்பாலனோ! என்னவோ நின்கருணை! என்ன நினைந்து புறப்பட்டுக் கொஞ்சங் கொஞ்சமாக வழியைக் கடந்து வரகுண பாண்டியன் ப்ரம்ம ஹத்தி தொலைந்த திருவிடை மருதூர் வந்து சேர்ந்து மகாலிங்க பூசையியற்றி அங் குள்ள ஓர் மடத்தில் வந்து தங்கினன். அப்போது மணி ஐந்து ஆய்விட்டது. கூட்டமாக வருபவரை நோக்கக் கடைமுழுக்கு நடந்துவிட்டது. அதற்குச் சென்று வருகின்றோம் என்று சொல்லக் கேட்ட முடவன், நம் பிரயத்தினம் அனைத்தும் வீண் ஆயி ற்று. நாம் உய்யுங்காலம் குறுகவில்லை. இறைவன் கிருபை இங்ஙனமாயின் என்ன செய்யக்கூடும், என்று விடமுண்டவன்போல் திகைத்து, நெஞ்சுலர நினைந்து நினைந்து உருகி நாம் அவ்விடத்தேயே சென்று பிராணனை விடுவதே நலம் எனத் தீர்மானஞ் செய்து இரவெல்லாம் வழிகடந்து துலாக் கட்டத்தில் உள்ள இடபதீர்த்தம் வந்து சேர்ந்தனன். கிழக்கு வெளுக்கப் பொழுதும் புலர்ந்தது.

ஆயிடை, பணிந்து நின்று ஹே! பெருமானே பல்லாயிரங் கோடி ஆன்மாக்கட்கு அருள் புரிந் தனை! எம்மாட்டு மட்டும் இரக்கம் என்பது தினை யளவுகூட இல்லாமற் போயிற்று. நான் கொடும் பாவியினும் பாவி. இனி வருந்துவதில் பிரயோஜன மில்லை. என் குறை யறிய உமக்கும் சம்மதியில்லை போலும். தெய்வத்திற்கும் வஞ்சனை உண்டாயிற்றே,

என்று கதறி, விருஷபத்து அடியில் தன் தலையை மோதி யுடைத்து உயிர் விடுக்க நேர்ந்த காலையில் வானில் விருஷபா ரூடராக அம்பிகை சமேதராய், நின்று, "ஹே! அன்ப! நின் பக்திக்கு வியந்தனம்! இனி யாதும் உனக்குக் குறையில்லை. இதோ சேவை தந்தனம். உன் பிணியும் இன்றோடு ஒழிந்தது. நீ சகல பேற்றினையும் பெற்று என்றும் அழிவில இன்பம் எய்துவை" என்றருளிச் செய்தனர்.

அது கேட்ட முனிவன் நெடுக்கிட்டு ஆவைக் கண்ட நாகின் கன்றுபோல், துள்ளித் துடித்துக் கதறி யழுது புரண்டு உருண்டு பெருமான் கருணைக்கு வியந்து, கண்ணீரும் கம்பலையுமாக விழுந்து பணிந்து எழுந்து,

* அசரவுயிர் போலெவைக்கு மேலா நின்றுங்
காதியந்தங் காட்டாத வொருவன் றன்னைத்
தகவுபெறு முபநிடதச் சிகையாய் ஞானச்
சத்சோதி வயங்கு மொளி மூல மான
பகவபவ னெனவடிய ரகத்திற் பேணும்
பண்ணவனை யென்னிருகண் மணியா யோங்கிப்
புகலருநன் மயிலாடு துறைக்கண் மேவும்
புண்ணியனைப் போற்றுநாள் போக்கி னேனே (1)

ஆதியனை யலைகடலி லால முண்டங்
காருயிரின் பயந்தபுத்த வண்ண லாய
சோதியனை நவவடிவாத் தோன்றிப் பொய்ம்மைத்
துரிசகலு மானதத்தின் றுறைக டந்த
வேதியனை மாதுமையாள் வேட்கை மீக்கொள்
விண்ணவனை யைந்தொழிலு மாற்ற வல்ல
பூதியனை மயிலாடு துறைக்கண் மேவும்
புண்ணியனைப் போற்றுநாள் போக்கி னேனே (2)

இவை ஆசிரியர் செய்தது.

இருந்தானை இலங்கையர்கோன் சென்னிப் பத்தின்
னின்னிசைக்கங் கிரங்கியருள் செய்யுந் தெய்வ
மருந்தானை மாதவர்கள் வளர்க்கும் வேள்வி
வருமழமான் களிற்றினுக்கங் கஞ்சா நெஞ்சம்
வருந்தானை வளரிமையச் சிமயப் பொற்பின்
மகவிழைவிற் கிசைந்திடமே வகுத்துப் புன்மை
பொருந்தானை மயிலாடு துறைக்கண் மேவும்
புண்ணியனைப் போற்றாநாள் போக்கினேனே.(3)

ஈன்றானை யெவ்வுலகுந் தனதாக் கொண்டிங்
கிடர்பழியா வங்களைய வேற்ற வுள்ளச்
சான்றானை யமபுலியோ டாவங் கொன்றைத்
தரித்தின்ப மேயளிக்க வல்ல நல்ல
வான்றானை யடிமுடியும் வேதன் மாலும்
அண்மிதா நவித்தேட வங்கி ரூபம்
போன்றானை மயிலாடு துறைக்கண் மேவும்
புண்ணியனைப் போற்றாநாள் போக்கினேனே.(4)

உரித்தானைக் கைம்மாவை யுவந்து முன்னம்
உணர்வரிய பேரின்பப் பூதி மெய்ம்மை
விரித்தானை யாறங்க வேதம் நான்கு
மெய்ப்படவன் றாலின்கீழ் விளக்கி மோனந்
தரித்தானை மைப்பிழைவ னீறு கொள்ளத்
தனிநுதற்கண் டிறந்தெரியை விடுத்துச் சீர்த்திப்
புரித்தானை மயிலாடு துறைக்கண் மேவும்
புண்ணியனைப் போற்றாநாள் போக்கினேனே.(5)

ஊற்றானை யென்னுள்ளத் தூறகற்றி
யுயரமுத வின்பமதை யூட்டும் ஞான
வேற்றானை யிமையவருக் காதி யான
வெம்மானைப் பெம்மானை யிணையொன் றில்லா

நீற்றானை நெடுவெங்க நீள்க மூல்க
ணெறிநின்று னயரவரு நெஞ்சக் கூற்றின்
போற்றானை மயிலாடு துறைக்கண் மேவும்
புண்ணியனைப் போற்றாநாள் போக்கி னேனே. (6)

என்றானை யிருநிலநீர் நீக்கால் வானம்
எற்சசியோ டியமான னாகி யார்க்கு
முன்றானை முன்னுபொருண் முன்றி னுள்ளும்
முனைந்தெழுந்த மூரியசிற் சோதி யான
தென்றானைத் திணைபாலோ டடங்கா னாநற்
றிருக்குவினை யிருக்கரிய வொண்ணு கில்லாப்
பொன்றானை மயிலாடு துறைக்கண் மேவும்
புண்ணியனைப் போற்றாநாள் போக்கி னேனே. (7)

ஏதமிலாப் பெருங்கருணை யேற்ற மாற்ற
லெய்தவரும் பெரும்புணையா மன்று ளன்று
கேதமிலாப் பணிபுழுவைக் காக தெய்வக்
கிளர்நடனங் காட்டியருட் பேறு நல்கிப்
பேதமெலா மிரித்தாண்டு கொண்ட வெங்கட்
பெம்மானைப் பிறப்பிலியைப் பேரா னந்தப்
போதமிகு மயிலாடு துறைக்கண் மேவும்
புண்ணியனைப் போற்றாநாள் போக்கி னேனே. (8)

ஐயானை யையுணர்விற் கப்பா லாகு
மகண்டிதா காரபர வெளியி லாரு
மெய்யானை யலரவன்முன் னாக்க ளேக்க
விழைவறிந்தங் குயர்வரமே யீந்த வள்ளற்
கையானை யெண்ணான்கு வறங்க ளாற்றுங்
களிமயிலுக் கின்புதர வந்த மெய்ம்மைப்
பொய்யானை மயிலாடு துறைக்கண் மேவும்
புண்ணியனைப் போற்றாநாள் போக்கி னேனே. (9

ஒருவானை சுவையொளியூ றோசை கந்த
மூலகுறுவா மேதையர்க ளூற்ற மேற்று
வெருவானை பரவையின்பா லாளூர் மேவி
வியன்றாது சென்றவடன் ஹூட நீர்த்தத்
திருவானைச் சிறுமையறிந் தின்ப மெய்தத்
திருவமுதங் குதவிகளைப் பாற்றுந் தாயிற்
பொருவானை மயிலாடு துறைக்கண் மேவும்
புண்ணியனைப் போற்றுநாள் போக்கினேனே.(10)

ஓங்குமல மூலத்தி னூக்க மேற்றங்
குணர்வழிவுற் றலமுறுமா வுயிர்க்கு வாய
பாங்குறுநற் றநுகரண புவனம் போகம்
படைத்தளித்தங் கீறுசெய்தே யாண்டு கொண்டு
தாங்குசொரு பானந்த நிலைமேல் வைக்குந்
தண்ணளியை யொண்சுடரா வெண்சங் காக்கப்
பூங்கவின்கொண் மயிலாடு துறைக்கண் மேவும்
புண்ணியனைப் போற்றுநாள் போக்கினேனே.(11)

ஔவியமா ருள்ளத்தி லார்ந்த வன்மை
யழியவடர்த் தாழ்புலத்தி லாங்கி றுக்கத்
திவ்வியதா ளுணர்வுற்றங் கேத்து நந்தித்
திகழ்பொளியி லெளிவந்துய்ந் தேற ஞானச்
செவ்வியறிந் துரைக்குமொரு மொழியா லுண்மை
தெளிந்தெமனோர் குடிமுழுதும் பிழைக்க வேய்ந்த
பொவ்விவளர் மயிலாடு துறைக்கண் மேவும்
புண்ணியனைப் போற்றுநாள் போக்கினேனே.(12)

என்னும் உயிர் வருக்கத் திருத்தாண்டகத்தைப் பாடித் துதித்துக் குதித்து நின்றனன். பின்னர், ஹேற! தாயினும் அன்புடையாய்! நின் கருணைப் பெருக்கின் நிலை எவர்தாம் அறிவர். கொடியனுகிய

என் கவல் அறிந்து காட்சி கொடுத்து ரக்ஷித்த உதவிக்கு என்ன கைம்மாறு புரியற்பாலன். ஏழை பங்காளா! என் மதியால் நின்னை என்ன சொல்லக்கூடும். ஆனால், என் உள்ளத்தில் ஓர் குறை இருக்கின்றது. அதாவது, என்போல கார்த்திகை மாதம் முதல் தேதி இன்று இத்தீர்த்தத்தில் முழுகித் துதிப்போர்க்குத்தான், துலா மாதத்தில் நீர் தோய்ந்து நோற்ற விரதபலன் கைகூடும், என்கிற வரம் ஒன்று மாத்திரம் அருளல் வேண்டும் என்று, விண்ணப்பித்துக் கொண்டனன். எம்பெருமானும் அங்ஙனே ஆகுக என்றும்,இன்றுமுதல் முடவன் முழுக்கென்றும் பெயர் தந்தனம் என்று கூறி அந்தரார்த்தம் ஆயினர். உடனே முடவன் கைலாயத்தினின்று சிவ கணங்களாற் கொண்டு வரப்பட்ட புட்பக விமானத்துள் ஏறிப் பெருமான் திருவடி நீழல் அடைந்தனன்.

அத்தலத்தின்கண் உள்ள இடப தீர்த்தத்தில் இந்த துலா மாதத்து உண்டாகிற நான்கு முழுக்கைக் காட்டிலும் விசேஷம் எங்கும் இல்லை. இதைப் போல் பாவம் துடைக்கும் இடம் கிடையாது என்பது திண்ணம். என்று, திலீப மகாராஜனுக்கு வசிஷ்ட மஹாமுனி சொல்லியதாக சூத புராணிகர் சௌனகாதியர்களுக்குச் சொன்னார்.

ஆகலின், அங்கு செல்கின்றோம்'' என்று கூறி, மாயூரம் வந்து சேர்ந்தனர். பின்னரே கண்ணுவரும் அவரது மனையாட்டியும், பின்றொடர்ந்து வந்து மாயூரம் அடைந்து இடபதீர்த்தத்தின் வடபாலில் ஆச்சிரமம் ஒன்று ஏற்படுத்தி சிவலிங்கப் ப்ரதிஷ்டை செய்து ஆராதித்துக் குரு தரிசனம் கண்டு அவர

உபதேச மொழியைக்கொண்டு, என்றும் அழியா நித்யானந்த வாழ்வைப்பெற்று வாழ்ந்தனர். கங்கை முதலாயவர்களும், அத்தீர்த்தத்திற் படிந்து பாவத்தைப் போக்கி எவரும் கொண்டாடும்படியாக விளங்கினர். ஆகலின், ஒவ்வொருவரும் ஆண்டு அடைந்து மூழ்கி நலம் பெறுவாராக.

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

முற்றிற்று.

மெய்கண்ட தேவன் றிருவடி வாழ்க.

**மகாமகோபாத்யாய, டாக்டர்**
**உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்**
அடையாறு, சென்னை-20

